*Tirāviṭa nāṭu*
*Malar 4, ital 33*
*November 18, 1945*

Record no. 1005

ஞாயிறு வெளியீடு ஆண்டு சந்தா ரூ. 5 தனிப்பிரதி 0—1—3 REGD. No. M. 4642

# திராவிடநாடு

மலர் 4 18—11—45 இதழ் 33



மா வீரன் லெனின்

# ★ பொய் - இலாப நஷ்டம்! ★

வேலாயுதம், எப்படியாவது அந்தப் பண்ணையை வாங்கிவிடத்தான்வேண்டும் என்று தீர்மானித்துவிட்டார். அந்தப் பண்ணையிலே, தங்கச்சுரங்கம் இருப்பது அவருக்குத் தெரியும், படாடோப வாழ்வினால் கடனாளியாகிவிட்ட பண்ணைச் சொந்தக்காரனுக்குத்தெரியாது. என்ன விலை கொடுத்தாகிலும் வாங்கிவிடுவது என்று, சொந்தக்காரரின் மாளிகைக்குப் போனார். இருவரும் பேசுகிறார்கள்.

"ஓ! வேலாயுதம்அவர்களா? வரவேண்டும், வரவேண்டும்! தாங்கள் வரப்போவதாகச் சொன்னார்கள்."

"நான் வருவதாகவா? இல்லையே! இந்தப்பக்கம் ஒருகாரியமாகச் செல்லநேரிட்டது. அப்படியே தங்களையும் பார்த்துவிட்டுப்போகலாம்! என்று வந்தேன், தற்செயலாகத்தான்."

"அப்படியா? நமது கணக்கப்பிள்ளையிடம், இந்தப்பண்ணை விஷயமாக என்னிடம் பேசவேண்டும்என்று சொன்னீராமே. அதற்காகத்தான் வந்தீர்கள் என்றல்லவா நான் நினைத்துக்கொண்டேன்"

"அதைச்சொன்னாரா?இந்தப்பண்ணை சம்பந்தமாக ஒருவிஷயம் கேள்விப்பட்டேன்............"

"அது உண்மைதான்; உமாபதிச்செட்டியார் ஒருஇலட்சத்து ஒன்பதாயிரத்துக்குக்கேட்டார்..........."

"ஒரு இலட்சத்துக்கா! ஜெமீன்தாரவாள்,தயவுசெய்துஎன்பேச்சைக்கேளுங்கள், யோசனையேவேண்டாம். விற்றுவிடுங்கள், நல்லவிலை."

"எது நல்லவிலை? ஒரு இலட்சத்து ஒன்பதாயிரமா, ஒருஇலட்சத்துஇருபத்து நாலாயிரமா, சேட் அமார்சந் அந்தவிலை கேட்டு, தரமுடியாது என்று அனுப்பிவிட்டேனே, பதினைந்து நாட்களுக்கு முன்பு."

"ஜெமீன்தாரவாள்! தங்களுக்கு ஒன்றும் இந்தப்பண்ணையைவிற்றுத்தான் ஆகவேண்டும் என்பதில்லை. இதிலே "இலாபம்" வந்து,என்ன ஆகப்போகிறது.நான், என் அரைப்பத்தாயிரம் போனாலும் வந்தாலும் விற்றுவிடச்சொல்கிறேன் என்றால், போனமாதம் ஒரு பயங்கரமான விஷயம் கேள்விப்பட்டேன், பண்ணை சம்பந்தமாக; அதிலே ஏதோ ஒரு பூதம் குடிஏறி இருக்கிறதாம். ஆளைக்கொல்லுமாம் அது."

"பூதமாவது, குடிஏறுவதாவது?"

"மஞ்சள்கிறமாம், பளபளப்பாகஇருக்குமாம், ஆளைக்கொன்றுவிடுமாம்.தக்கவரொருவர் சொன்னார். அடடா! நம்ம ஜெமீன்தாருக்கு, இந்தச் சனியன்பிடித்தபண்ணையே வேண்டாம், என்றுஎண்ணினேன், அதனாலேதான் கணக்கப்பிள்ளையிடம் சொன்னேன், அப்பா! எப்படியாவது ஜெமீன்தாரிடம் சொல்லி அந்தப்பண்ணையை விற்றுத்தொலைத்துவிடு என்று."

"நீங்களேவாங்கிக்கொள்வதாக......"

"நானா? நான் பிள்ளைகுட்டிக்காரன், பூதம் குடியிருக்கும் பண்ணையை வாங்குவது என்றால், பயமாக இராதா?"

"சொன்னானே கணக்கப்பிள்ளை................"

"நான் சொன்னதுவேறே. எப்படியாவது, அந்தப்பண்ணை நம்ம ஜெமீன்தார் கையைவிட்டு மாறிவிடவேண்டும்; அப்போதுதான் அவருக்கு ஆபத்து வராது. யாரும், விலைகொடுத்துவாங்க உடனே கிடைக்காவிட்டால், நான்வாங்கிவைக்கிறேன். நான்சிலருக்குக் கடன்தரவேண்டி இருக்கிறது கடனைத்திருப்பித்தரும்படி அவர்கள் கேட்பார்கள். அப்போது, இந்தச்சனியனை அவர்கள் தலையிலேகட்டிவிடுகிறேன்.எப்படியாவதுபூதப்பண்ணை, ஜெமீன்தாருக்குக் கேடுசெய்வதற்குள், அதைவிற்றுவிடவேண்டும் என்றுசொன்னேன்."

"எனக்கு அம்மாதிரி விஷயத்திலேநம்பிக்கைகிடையாது. அதற்காகப் பண்ணையைவிற்கவேண்டுமென்ற அவசியமும் கிடையாது. ஆனால் நான் பாரிசில்போய் வசிக்கத்தீர்மானித்திருக்கிறேன். அவ்வளவு தொலைவிலே இருந்துகொண்டுபண்ணையை நிர்வகிக்கமுடியாதே, பாழாகிவிடுமே, என்பதற்காகத்தான், அதைவிற்றுவிடுவோம் என்று எண்ணுகிறேன். திரும்பவும், வந்த உடனே வாங்கிவிடலாம்என்ற எண்ணம். வேறொருவர்கைக்குமாறினால் நன்றாகஇராதே, வேலாயுதம் நமக்கு நீண்டநாள் சிநேகமாயிற்றே, அவருக்குவிற்றால்பிறகுவேண்டும்போது, திருப்பிவாங்கிக்கொள்ளலாமே என்று நினைத்தேன்."

"தாங்கள் சொன்னால், அதன்படிநான் நடக்கிறேன், இதற்கென்ன?"

"விலை, உங்கவிஷயத்துக்கு ஒருஇலட்சம்"

"என் சக்தி அவ்வளவுக்கு இடந்தராதே"

"பிறகு தங்கள் இஷ்டம்"

"என்னாலே அவ்வளவு தொகை தரமுடியுமா? பணம் எது? ரொக்கம் இருப்பது அறுபதாயிரம்! கொஞ்சம் வைரம் இருக்கிறது, பரம்பரையாக இருப்பது, விற்கமனம் இல்லை. இந்தச்சமயத்திலே அதைவிற்றால், மொத்தத்தில் ஒருஇலட்சம் கிடைக்கும். ஆனால் யார் இருக்கிறார்கள் வாங்க"

"எனக்கு வைரமென்றால்உயிர்!ஆனால் விஷயம் என்ன தெரியுமோ? நம்மஜோதிடர், ஒருவிஷயம் சொல்லிவிட்டார், இன்னும் ஒரு ஐந்து வருஷத்துக்கு, நான் வைரம் வாங்கவேகூடாதாம். என்ஜாதக பலன் அப்படி இருக்கிறதாம். அதனாலே நான் நமது ஜெமீன் வைரத்தைஎல்லாம் ஜெயவீரச்செட்டியாரிடம்கொடுத்துவிட்டேன், யாருக்காவது விற்றுவிடுங்கள் என்று."

"சரி! நான் வேறுஏதாவது வழிஇருக்கிறதாஎன்று பார்த்துவிட்டு வருகிறேன் நாளைக்கு. இதற்குள் யாராவது விலைபேசினால்........................"

"நீ வேண்டுமென்று கேட்டுவிட்ட பிறகு, வேறொருவருக்கு விற்பேனா?"

"இல்லை, ஜெமீன்தார்வாள்! வேறுயாராவதுகேட்டால் தயவு செய்து விற்றுவிடுங்கள்! எனக்குச்சிரமம் இராது அப்போது. போய் வருகிறேன்"



பண்ணை ஒரு இலட்சரூபாய்க்கு விற்கப்படுகிறது, வேலாயுதத்துக்கு அல்ல! அவரால் ஏவிவிடப்பட்ட அவருடைய ஏஜண்டுக்கு. பட்டாஏஜண்டுபேரில்,பண்ணையின் உண்மைச்சொந்தக்காரர்,வேலாயுதமேதான்.



இது, வேலாயுதத்தின் சாமர்த்தியம்! முதலாளித்துவ உலகிலே,'முதல்தரமான அறிவு' என்று இதற்குப்பெயர். கண்டுபிடிக்கமுடியாத கபடம், நாசுக்கானநயவஞ்சகம், சொகுசான சூதுகள், பொய்யுரைகள், வேலாயுதம் வீசியகணைகள். ஆனால் அந்தஉலகிலே அவைகளை வீசுபவரைக்கபடன், நயவஞ்சகன், புளுகன்,என்றெல்லாம் கூறமுடியாது! அபாரத்திறமை, பேரம்பேசுவதிலே நிபுணர், வியாபாரதந்திரம் அறிந்தவர், எடுத்தகாரியத்தை எப்படியாவது முடிக்கக்கூடியவர்என்ற "விருதுகள்" அவருக்குக்கிடைக்கும்! காரியத்தைச்சாதிக்க,இலாபத்தைக் குவிக்க, உண்மையை உள்ளத்தைவிட்டேவிரட்டிவிடலாம், குற்றமல்ல!!



"முட்டாள், மூன்று மணிக்கு வரச்சொன்னேனே, என் வரவில்லை?" என்று கோபமாகக்கேட்கிறார் வேலாயுதம் வேலைக்கார வேணுவை.

(11-ம் பக்கம் பார்க்க)



# ரஷிய ரகசியம்!

[இரகசிய ஆயுதங்களின் காலம் இது! அமெரிக்கா, தன்னிடம் உள்ள "அணுகுண்டு" இரகசியத்தை, யாருக்கும் கூற முடியாது என்று கூறுகிறது, ரஷியாவிடம் ஒரு மகத்தான இரக்சியம் உண்டு; இல்லாமை போதாமை எனும் கொடுமையைஒழிக்கும் இரகசியம். ரஷியா அந்த இரகசியத்தை மறைக்கவில்லை. மாநிலத்திலே யார் கேட்டாலும், வெளியிட்டுவருகிறது. இதோ அந்த ரஷியஇரகசியம்!!]

"மார்க்கட் இன்று எப்படி இருக்கிறது?"

"கொஞ்சம் மந்தம்"

"என்?"

"சரக்கு குவிந்துவிட்டது; விலைகுறைகிறது!"

ஃ ஃ ஃ ஃ

இது முதலாளிக்கும், மார்க்கட் நிலவரத்தை அறிந்துகூறும் தரகனுக்கும் இடையே நடக்கும்பேச்சு, பங்களா ஹாலில். இதன்விளைவு, முதலாளியின் டெலிபோன் அறையிலேஆரம்பமாகிறது.

ஃ ஃ ஃ ஃ

"மானேஜர்! ஹலோ மானேஜர்"

"சார்! குட்மார்னிங்! ஆமாம் மானேஜர்தான் பேசுகிறேன்"

"கையிருப்புப்பேல்கள் எவ்வளவு?"

"ஸ்டாக், ஆயிரம்பேல் இருக்கிறது. இந்தவாரத்திலே மற்றொரு ஆயிரம்பேல் சாக்குத்தயாராகும்,"

"இந்தவாரம் அவ்வளவு சரக்குத்தயாரிக்கவேண்டியதில்லை,"

"அதிகமாக உற்பத்திசெய்ய வேண்டுமென்று, போனமாதம்போட்ட திட்டத்தின்படி, இரண்டாயிரம் தொழிலாளரை புதிதாகச்சேர்த்தேன், போனவாரம்"

"தெரியும்! டெம்பரரிதானே"

"டெம்பரரிதான், ஆனால் உற்பத்தித் திட்டம்பெருகும் என்றும் அந்தத்தொழிலாளருக்கு வேலைநிரந்தமாகுமென்றும் சொல்லிச்சேர்த்தேன்"

"நீ சொன்னாய், அவ்வளவுதானே! சரி! புதிதாகச் சேர்ந்தவர்களுக்கு நோடீஸ் கொடுத்துவிடு. நாளைக்கு வேலைக்கு வரவேண்டாம். இன்று வரட்டும், வேலை செய்யவேண்டாம்.

"தொழிலாளர் சங்கத்தார் தொல்லை தருவார்கள்."

"அதற்குத்தானே அவர்கள்இருப்பதே. அதைக்கவனிக்கவேண்டாம்."

"மார்க்கட் சரியாக இல்லை"

"சரிதான்"

"சரக்குகள் குவிக்கக்கூடாது, விலை இறங்கிவிட்டது"

"சரிதான்"

"பெரியமெஷின் ரிப்போராக வேண்டுமென்று போனமாதம் என்ஜினியர் சொன்னாரே?"

"ஆமாம், ரிப்பேர் பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று தாங்கள் சொல்லிவிட்டீர்கள்"

"சரி! இன்றுஆரம்பித்துவிடு ரிப்பேர். நோடீஸ்போர்டிலே அதைக்குறிப்பிட்டுவிடு."

"பெரியமெஷின் வேலை செய்யாவிட்டால், இராத்திரிவேலைக்கு வரும் ஆயிரம் பேருக்கு வேலைஇராதே"

"இராது! அதையும் சொல்லிவிடு"

ஃ ஃ ஃ ஃ

இரண்டாயிரம் தொழிலாளருக்கு வேலைபோயிற்று! ஆயிரம்பேருக்கு ஒரு வாரம் கூலிகிடைக்காது. மார்க்கட், இத்தனை குடும்பங்களிலே மண் தூவுகிறது. டெலிபோனிலே, ஒருஐந்துநிமிஷம்பேசினார், விளைவு மூன்றுஆயிரத்துக்கு மேற்பட்டகுடும்பங்களிலே அழுகுரல்! பசிக்குரல்! டெலிபோன்மேலும் வேலை செய்கிறது.

ஃ ஃ ஃ ஃ

"ஹலோ!"

"ஹலோ! ஹலோ! குட்மார்னிங்"

"மார்க்கட் எப்படி இருக்கிறது?"

"இறக்கந்தான்"

"நேற்றைக்கு இன்று எப்படி?"

"இரண்டணாக் குறைவு"

"மார்க்கட்டிலேமொத்தச்சரக்கு எவ்வளவுஇருக்கும்?"

"பத்துஇலட்சம் ரூபாய்க்கு"

"வாங்கிவிடுங்கள்"

"யாருக்குத்தரப்போகிறீர்"

"எனக்கேதான்"

"சரி! கமிஷன்?"

"வழக்கப்படி"

ஃ ஃ ஃ ஃ

டெலிபோன்பேச்சு, முதலியாருக்கும் மார்க்கட் ஏஜண்டுக்கும் நடந்தது. சரக்கு மார்க்கட்டைவிட்டுக் கிடங்குக்குள்போய் விட்டது. உற்பத்தியும் குறைந்தது மார்க்கட்டில் இருந்த மொத்தச்சரக்கும்மறைந்தது. மார்க்கட்டிலே விலை இறங்கிக்கொண்டுவரும் என்று நம்பிக்கொண்டு, பிறகு வாங்கலாம், பிறகு வாங்கலாம், என்று எண்ணிக்கொண்டிருந்தவர்கள், மார்க்கட்டிலே சரக்கு இல்லாததால்பரபரப்பு அடைகிறார்கள். விலைஏற ஆரம்பிக்கிறது.

ஃ ஃ ஃ ஃ

முதலாளியின் மில்லிலே ஆள்குறைப்பும் வேலைகுறைப்பும் ஏற்பட்டதாலே, உற்பத்தியும் தட்டுப்பட்டுவிட்டது. மூவாயிரம்தொழிலாளருக்கு வேலை இல்லை. மார்க்கட்டிலே சரக்கு இல்லை. விலைஏறுகிறது. முதலாளி கடிதம் எழுதுகிறார். யாருக்கு? நூறுமைலுக்கு அப்பாலுள்ள ஆத்மநாதஸ்வாமியின் ஆஸ்ரமத்துக்கு, இதோ கடிதம்!

ஃ ஃ ஃ ஃ

குருஜீ!

நமஸ்தே! நான் இன்னும் இரண்டு நாளிலே ஆஸ்ரமம் வருவதாக இருக்கிறேன்; சாந்தியே இல்லை. மேலும் ஒரு தத்துவநூலைப் படித்துக்கொண்டிருந்ததிலே சிறசந்தேகம் ஏற்பட்டது. அதனையும்தங்களிடம் கூறித் தீர்த்துக்கொள்ள வேண்டும். இந்தக்கடிதத்துடன் தாங்கள் புதிதாகக்கட்ட இருக்கும்மண்டபத்துக்கு என்காணிக்கையாக ஒரு சிறு தொகை (5000 ரூபாய்க்குச் செக்) அனுப்பியிருக்கிறேன். அங்கீகரிக்கவும்.

தங்கள் சிடன்,
சமரசநாதன்.

ஃ ஃ ஃ ஃ

அடுத்தகிழமை "அஞ்சா நெஞ்சன்" பத்திரிகை ஆபீசுக்கு, விசேஷ நிருபர் கீழ்கண்ட செய்தியை அனுப்பினார்.

## ஆத்மநாத ஆஸ்ரமம்

சாந்தமும் தெய்வீகமும் குடிகொண்டிருக்கும், ஆத்மநாத ஆஸ்ரமத்திலே, நேற்றுப், புதியமண்டபம்கட்டுவதற்கான ஆரம்பவிழா வைபவம்சிறப்பாக நடைபெற்றது. 'தர்மபூபதி'என்றபட்டம்,தினகரன்மில் சொந்தக்கார் சீமான் சமரசநாதன் அவர்களுக்குத்தரப்பட்டது. அன்னாரின் அரியகுணங்களைப்பாராட்டி ஆத்மநாதர்பேசினார். அன்றுமாலை 'பகவத்சங்கீர்த்தனமும்,' விருந்தும் நடைபெற்றது. செல்வவான்கள், தர்மபூபதி சமரசநாதரைப்போல் சிலந்திறப்பியவராக இருந்தால், நாட்டிலே க்ஷேமம் சுபிட்சமும்

[அடுத்த பக்கம் பார்க்க]

3-ம் பக்கத் தொடர்ச்சி

போராட்டமும் இராது. தர்மபூபதியின் புகழ்தாணி எங்கும்பரவுக!

ஃ ஃ ஃ ஃ

விசேஷநிருபரின், கையை சமரசநாதர்குலுக்கியபோது, ஆஸ்ரம விழாவைப்பற்றி விமரிசையாக எழுது என்று கேட்டுக்கொள்ளவில்லை. ஆனால் அன்று குலுக்கியகரம், அனேகமுறை, விசேஷநிருபருக்கு "நோட்டுகளைத்" தந்தகரம் என்பது விசேஷநிருபருக்குத் தெரியும். ஆகவேதான், 'அஞ்சா நெஞ்சன்' பத்திரிகைக்கு அழகானமுறையிலே அவர் ஆஸ்ரமவிசேஷத்தைப்பற்றி எழுதினார்.

அதேநாள், உள்ளூர் நிருபர் வேறோர் செய்தியைத்தந்தார். "3000-க்கு மேற்பட்டதொழிலாளர்கள் வேலையில்லாக் கொடுமையைப்பற்றிக் கிளர்ச்சி செய்கிறார்கள். நேற்றுமாலை தொழிலாளரின் மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது. போலீசார், அசம்பாவிதம் எதுவும்நேரிடாதபடி முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகள் செய்திருந்தனர்.

'அஞ்சாநெஞ்சன்' இதையும்பிரசுரித்தது. இவற்றுடன்இரண்டுநிபுணர்களின்நிருபங்களும்வெளிவந்தன. ஒருவர்தொழிலாளர் பிரச்னை தெரிந்தநிபுணர். அவர், "தொழிலாளர்கள் அதிலும் குறிப்பாக நெசவு ஆலைத் தொழிலாளர்கள் வேலையில்லாத் திண்டாட்டத்திலே உள்ளனர். இதற்குப் பரிகாரம்என்ன? அவர்கள் அதுதெரியாமலேயேவீண்ஆரவாரம் செய்து வருகிறார்கள். நெசவுஆலைகளிலே ஆட்குறைப்புக்குத் தக்ககாரணம் இருக்கிறது. உற்பத்தி அதிகரித்துவிட்டது; மார்க்கட்டிலே, சரக்குக் குவிந்துவிட்டது; ஆகவே விலைவாசி குறைந்து, நெசவு ஆலைக்காரருக்கு நஷ்டம் ஏற்படும் குறி காணப்பட்டது. மேலும் நஷ்டம் நேரிடாதிருக்க, ஆலை முதலாளிகள் வேலைக்காகச் சேர்த்துக்கொண்டிருந்த தொழிலாளர்களின்தொகையைக் குறைக்க வேண்டியதாயிற்று, ஆலைத்தொழிலிலே, அதிகமான ஆட்கள் குவிகிறார்கள்; இது ஆபத்தாக முடியும் என்று நான் ஆறுமாதங்களுக்கு முன்பே எச்சரிக்கை செய்திருந்தேன். தொழிலாளர்கள் என் எச்சரிக்கையைப் பொருட்படுத்தவில்லை. இதன் கோரவிளைவு இப்போது தெரிகிறது" என்று எழுதிஇருந்தார்.

மற்றொருவர், பொதுமக்களின் நலன் பற்றிய அறிவுள்ளவர்—நிபுணர், அவர் எழுதினது என்ன தெரியுமா?

"பொது மக்களுக்கு இப்போதுள்ள புதியஆபத்து,அவர்களுக்குப்போதுமான ஆடை கிடைக்காததுதான்! மார்க்கட்டுக்குச்சென்று சரக்குக்கிடைக்காமல் ஜவுளி வியாபாரிகள் திண்டாடுகிறார்கள். துணி வாங்குவதற்குக் கடைகளுக்குச் சென்று, துணி கிடைக்காததால் கஷ்டப்பட்டுக்கொண்டு பொதுமக்கள்வீடுதிரும்புகிறார்கள். துணிப்பஞ்சத்தை உடனே நீக்க வேண்டும், இதற்குவழி இருக்கிறது. ஆலைகள் இன்று உற்பத்திசெய்யும் அளவுமிகக் குறைவு. தொழிலாளர்கள் ஏராளமாக உள்ளனர். ஆலை ஒன்றுக்கு ஆயிரம்பேர் வீதம் குறைந்தது பத்தாயிரம் ஆட்கள் உடனே சேர்க்கப்பட்டால், சரக்குஉற்பத்தியின் அளவும் வேகமும் அதிகப்பட்டுப், பொதுமக்களுக்கு ஏற்பட்டுள்ள புதிய கஷ்டமான துணிப்பஞ்சம்ஒழியும்" என்று அவர் எழுதினார்.

உற்பத்தி அதிகம், ஆகவே ஆட்குறைப்பு அவசியமாயிற்று என்று ஒருநிபுணர் கூறுகிறார், உற்பத்திகுறைவு ஆகவே துணிப்பஞ்சம் ஏற்பட்டுவிட்டது என்று வேறோர் நிபுணர் கூறுகிறார், பொருந்தக்காணோமே ஒன்றோடொன்று என்று ஆசிரியர் அஞ்சினாரா? இல்லை! அஞ்சுவாரா? "அஞ்சாநெஞ்சன்" ஆசிரியரல்லவா அவர்! முரண்படும் இருசெய்திகளும் வெளிவந்தன. இந்த முரண்பாட்டினை விளக்கி ஆசிரியர் தலையங்கம்தீட்டினாரா? இல்லை! அவர், மொராக்கோ மண்டலத்துச்சுதந்திரஇயக்கத்தை ஆதரித்தும், அந்தச்சர்க்காருக்கு எச்சரிக்கை தெரிவித்தும் அன்று காரசாரமான தலையங்கம் தீட்டினார்! வாசகர்களாவது, இந்தமுரண்பாடுபற்றி சிந்தித்தனரா? இல்லை! எத்தனையோ முரண்பாடுகளிலே இது ஒன்று, எனவே அவர்கள் அதைக்கண்டு ஆச்சரியப்படவில்லை. உதாரணமாக அன்று "அஞ்சாநெஞ்சன்" ஒருபக்கத்திலே, மகானின் அருள்பெற்ற மாந்திரீகரின் கவசம்என்ற விளம்பரத்தை வெளியிட்டிருந்தது, மற்றோர்பக்கத்திலே, மாந்திரீகம் ஒருமனமயக்கம் என்ற விஞ்ஞானக்கட்டுரையையும் வெளியிட்டிருந்தது! எவ்வளவோ முரண்பாடுகளைக் கண்டு பழக்கப்பட்டுப் போன வாசகர்கள் ஏன் சிந்தனைக்கு வேலைதரப்போகிறார்கள்!

ஃ ஃ ஃ ஃ

இந்த முரண்பாடுகளை,முதலாளித்வம் உற்பத்திசெய்கிறது. ஒருபுறம் வேலையில்லாத தொழிலாளர்கள் தொகைதொகையாகஇருப்பர்! மற்றோர்புறம், தேவைக்கேற்றஅளவு சரக்குக்கிடைக்காததால்தவிக்கும்மக்கள் இருப்பர். முதலாளியின் இலாபநோக்கம், சிலசமயம் சரக்குகளைத் தேக்கிவைக்கும், வேறுசிலசமயங்களிலே சரக்குகளை, மார்க்கட்டைவிட்டு விரட்டி அடிக்கும். அவசியமானது ஆகவே செய்யப்படவேண்டியது என்பதல்ல முதலாளித்வதத்துவம்; இலாபகரமானது ஆகையால் செய்யப்படவேண்டியது என்பதே தத்துவம். மார்க்கட்நிலவரத்துக்குத்தக்கபடிமுதலாளியின்டெலிபோன்பேச்சு அமையும், அந்தப்பேச்சின் விளைவாக எவ்வளவோ தொழிலாளரின் வாழ்வு சிதையும். சிதையும் வாழ்வைச் செம்மைப்படுத்துவது, முதலாளித்வ முறையல்ல! தமது சீலத்தைக்காட்டிக்கொள்ள ஆஸ்ரமத்துச் சாமிகளுக்கு அள்ளித்தந்துவிட்டுத் 'தர்மபூபதி'களாகிவிடுவதே முதலாளித்வ முறை! ஆகையால்தான், முதலாளித்வ முறையுள்ள இடங்களிலே, பண்டங்களின் தேக்கம் இருந்தும் பட்டினி ஒருபுறம் இருக்கிறது; பணம்சில இடங்களிலேகுவிந்திருந்தும்பாமரர்களின் பட்டிவளருகிறது. தொழில் அபிவிருத்திக்கு வழியும்தேவையும் இருந்தும் வேலையில்லாதார் உள்ளனர். முதலாளித்வம், முரண்பாடுகள் நிறைந்த முகாம்! அதன்மீது, வீழ்ந்தது லெனின் தயாரித்த சமதர்மச் சம்மட்டி அடி. சிதறுண்டுபோயிற்று இலாபவுணர்ச்சி எனும் கருங்கற்பாறை! இலாபத்துக்காகத்தொழிற்சாலைகள் இல்லை, எனவே வேலையில்லாத் திண்டாட்டம் அங்கே இல்லை.

போர் மூண்டதால் புதுவேலை ஜுரவேகத்திலே, பல்வேறுநாடுகளிலே ஏற்பட்டது. போர் முடிந்தது, வேலையில்லாத்திண்டாட்டப் புலம்பல் கிளம்பிவிட்டது. முதலாளித்வமுறை, இலாபம் கிடைக்கும் வரையில் வேலைதரும்தொழிலாளருக்கு; இலாபம் இல்லையேல் வேலையும் இல்லை! என்று கூறிவிடும். பால்தரும் வரையில் பசு தொழுவத்திலே இருக்கிறது, பால் தருவது தீர்ந்ததும், கிராமத்திலே துரத்தப்படுகிறதே அதுபோல.

ஐரோப்பிய நாடுகளிலேயும், இங்கேயும் இன்றுள்ள பிரச்னை, வேலையில்லாததிண்டாட்டம் தலைவிரித்தாடுமே, அதற்கு என்னசெய்வது என்பதுதான். முதலாளித்வமுறையை முறியடித்த ரஷியாவிலே, இப்போதும், அந்தப்பிரச்னை இல்லை. புரட்சிவிழா நாளன்று பேசின மலடோவ், இத்தனை ஆயிரம் தொழிற்சாலைகளை நாஜிகள் நாசமாக்கினர், இத்தனை ஆயிரம் கூட்டுப்பண்ணைகளை அழித்தனர், சோவியத் சொல்லொணாக் கஷ்டநஷ்டம் அடைந்திருக்கிறது, ஆனால் ரஷியாவிலே, இந்தச் சமயத்திலும், வேலையில்லாத்திண்டாட்டம்இருக்காது! என்று கூறினார். அந்த ஒருவாசகத்திலே உள்ளதத்துவம், எவ்வளவு உயர்தரமானது என்பதைச் சிந்திக்கச் சிந்திக்கச் செந்தேனினும் இனிக்கும். ஒருவீச்சிலே, ஜப்பானிய ஏகாதிபத்யத்தை அடக்கிய 'அணுகுண்டு' எம்மிடம் இருக்கிறது என்று பேசிக்கொள்வது பெருமையா? உலகம் பூராவும் வேலையில்லாக்கொடுமையாலும், தொழிலாளர் துயராலும், வேலை இறந்த வேதனையாலும் அல்லற்படும் இந்நாளிலேயும், எமதுநாட்டிலே வேலை இல்லை என்றுகூற ஆள்இல்லை! என்று கூறுவது பெருமையா என்பதை அணுகுண்டும் கையுமாக நின்று அகிலமுழுதுக்கும் அன்புரைவழங்கும் அமெரிக்காயோசித்துப்பார்க்கவேண்டும்.

—●—



# அவர்களும் எழுதினார்கள்!



"மன்னன்கையில் செங்கோல் "இருக்கிறது. அவன் கையசைத்தால் போர்வீரர் என்னைப்பழிவாங்க வருவார்கள். மதகுருவின்கையில் சிலுவையிருக்கிறது. அவன் முன் மண்டியிட்டுக்கிடக்கும் மக்களை என் மீது ஏவுவான். எனினும் இருவரையும் எதிர்க்கிறேன். அதைவிடப் பலமான பேனா இதோ! என்கையில் இருக்கிறது" எனக்கூறினார் வால்டையர்.

கிரேக்க, ரோமத் தனியரசுகளுக்குப் பின், படிப்பு மதக்குருமார்வசத்தில்இருந்தது. அது பூஜைமேடையில்வைக்கப்பட்டிருந்தது. சிறுகூட்டத்தின்வாழ்விற்காக, அதுவும் வாழ்ந்தது உரிமையின்றி. ஆனால் வால்டையர் கலையுலகிலே புகுந்து கசடர்களுக்குத்தந்த கசையடிகாலத்தின்போக்கை மாற்றியது. தளையிடப்பட்டிருந்தகலைமானை அவிழ்த்துவிட்டார். அது துள்ளிச்சென்ற வேகத்தில் அசையாதமகுடங்கள் ஆடத்தொடங்கின. பிரஞ்சுப் புரட்சிக்கு வாய்க்கால் வெட்டியவர் வால்டையர். புதுப்புனல்வந்ததும் தங்குதடையின்றிச் சென்றது. புரட்சிவாடை வால்டையரின் எழுத்திலே வீசியது; டெட்ராய்ட், ரூசோ முதலியவர்களும் அதேவழிசென்றனர். பிரஞ்சுப்புரட்சிக்கு அவர்கள்வாழ்த்துக்கூறினர். பாடசி வந்ததும் கல்வியின் உரிமை கைமாறியது.

ருஷியப்புரட்சிக்குமுன் அந்நாட்டுக் கலை கண்ணாடிக்கதவிற்குப்பின் கவனிப்பாரின்றிக்கிடந்தது. அதைப்பார்க்கமுடியும்; தொட்டுப்பழக முடியாது. ஜார் அரண்மனையில், பிரபுக்களின் மாளிகைகளில் அதுவாழ்ந்து, பஞ்சணையிலிருப்போருடன் கொஞ்சிக்குலவியது; கஞ்சியின்றிவாடும் பஞ்சைகளைப் பற்றிக்கவனிப்பதில்லை. கூண்டிலே கொஞ்சும்கிளிக்கும், தெருவிலே குரைக்கும் நாய்க்கும் எவ்வளவுதொடர்புஇருக்குமோ அவ்வளவுதான் ஏட்டுக்கும் நாட்டுக்கும் இருந்தது. ஆனால் பத்தொன்பதாம் நூற்றாண்டுஉலகெங்கும் பழமையுடன் போரிட்டதல்லவா? அப்பொழுது வருங்காலத்திற்கு—புரட்சிக்கு—வாழ்த்து, வழிசெய்யருஷிய நாட்டு எழுத்தாளர்கள் புறப்பட்டனர். அவர்கள்மற்றவர்களைப்போலத், தலைஎழுத்தாளர்களோ வலை எழுத்தாளர்களோ அல்ல 'நிலை எழுத்தாளர்கள்.' ஜாரும், குருமாரும் செய்தகொடுங்கோன்மையை எதிர்த்து நடத்திய புரட்சி முதலில்எழுத்துலகிலேதான் எழுந்தது. எழுத்தாளர்கள்—உலகமுள்ளளவும் மறக்கமுடியாத எழுத்தாளர்கள் தோன்றினர். அவர்கள் தீட்டிய ஓவியங்களில், ருஷியா—உண்மையானருஷியா காட்டப்பட்டது. பிச்சைக்காரன், வேலைக்காரன், வண்டியோட்டி, வியாபாரி, திருடன், கொலைகாரன், இவர்கள்வந்துலவினர்; பயந்தவர்களாகப்பேசவில்லை, உண்மையைச் சொன்னார்கள். "நான் திருடன் என்றால் ஏன் வெறுக்கிறீர்கள்? உங்களுடைய நாட்டாண்மைக்காரன் உங்களிடமிருந்து அதிகமாக வரி வசூலிக்கிறானே அவன்யார்? சரி, வட்டி அதிகம் வாங்கிக்கொடுத்து வருகிறானே அவன்நல்லவனா?" என்று திருடன் கூறுவான். "நான் விபசாரிதான். நான் வேறு என்ன செய்யமுடியும்? வறுமையால்இந்நிலைக்கு வந்தேன். வருத்தப்படவில்லை. எப்படியோ வாழ்ந்தால் சரி" என்று விபசாரி சிரிப்பாள். "சீனர் மண்டலங்களை மணல்மேடுகளாக ஆக்கவில்லையா? இந்தியாவரைவந்த அலெக்ஸாண்டர்பெருங் கொலைகாரனல்லவா? போர்க்களங்களிலே வெற்றிகண்டநெப்போலியன் எண்ணற்ற இளம் விதவைகள், பலகோடி அனாதைச்சிறுவர்கள், முடவர், குருடர், இவர்களை உண்டாக்கவில்லையா? அவர்களுக்கு நீங்கள் கொடுத்த பட்டம் என்ன? மகாவீரன், மகான், மகாப்பிரபு! நான்மட்டும்கொலைகாரனா? "என்று கொலைகாரன் சொல்வான். அவர்களிலே சிறந்தவர்களாக வந்தவர்கள் புஷ்கின், கோகோல், டர்ஜினிவ், டால்ஸ்டாய், டாஸ்டோவ்ஸ்கி முதலானோர்கள். அவர்களில்பலரை வாழ்வே விரட்டியடித்தது. குறிப்பாக டாஸ்டோவ்ஸ்கிஎன்பவர் சைபீரியாவிற்கு அனுப்பப்பட்டார். ஜார்மன்னருக்கு எதிராகச்சதி செய்தாரென்று குற்றம் சாட்டப்பட்டுத் தூக்கு மேடையில் நிறுத்தப்பட்டார். கடைசிநேரத்தில் மன்னிக்கப்பட்டு நாடுகடத்தப்பட்டார். வறுமை வழக்கம் போலத் தோழமைசென்றது. பலஆண்டுகள்வெளிநாடுகளில்கஷ்டப்பட்டபின் ருஷ்யாவிற்குத்திரும்பினார். அவருக்கு மக்கள் ஆடம்பரமான வரவேற்பளித்தனர். அதற்குப்பின் நெடுநாள் உயிருடன் இருக்கவில்லை. அவர் இறந்ததும் மக்கள் அவருக்குவணக்கம் செய்தனர். அவருக்குச் சைபீரியாவில் இடப்பட்டிருந்த விலங்கும் சவப்பெட்டியுடன் ஊர்வலம் சென்றது. அவ்வாறு புரட்சிக்கு வித்திட்டனர் ருஷிய எழுத்தாளர்.

புரட்சி வந்தது கார்க்கி போன்றவர்கள் நாட்டுக்குத் திரும்பினர். ஏட்டில் மட்டுமன்றி நாட்டிலே ஒன்றுபட்ட உரிமையுடன் விளங்குகிறருஷியாமலர்ந்தது, புரட்சிக்கலை மணம் வீசியது.

**"கலைகளைக் கண்ணாடியென்பர் கலைவாணர்கள், தவறு. கலையென்பது முதலாளி மங்கையின் கையிலிருக்கும் கண்ணாடியல்ல, தொழிலாளியின் கையில் பிடித்த சம்மட்டி அது. உணர்ச்சியையும், ஊக்கத்தையும் கொடுக்கவேண்டும்."** இது புரட்சிக்கலையின் அடிப்படையாக அமைந்தது.

ருஷிய அரசாங்கம் அதைநடைமுறையில் கொண்டுவந்தது. கீழே கொடுக்கப்படும் குறிப்புக்கள் அதை நன்கு புலப்படுத்தும்.

1913ல் ருஷியாவில் 859 பத்திரிக்கைகள் இருந்தன. அவற்றில் 775 ருஷிய மொழியில் எழுதின. மொத்தம் 27,00 000 பிரதிகள் அச்சிடப்பட்டன. 1938ல் 8,500 பத்திரிக்கைகள் வெளிவந்தன. பத்துமடங்கு அதிகமான எண்ணிக்கை. சுமார் 2000 பத்திரிக்கைகள ருஷிய மொழியில்லாத அந்நிய மொழிகளில் வெளிவந்தன. பிரதிகளின் எண்ணிக்கையோ 37,500 000!

ஐந்தாண்டுத் திட்டத்தின்போது நாட்டுக்கல்விவளர்ந்தது. 1914—15ல் 1953 நடுநிலைப்பள்ளிகளும், 42803 ஆசிரியர்களும், 635,591 மாணவர்களும் இருந்தனர். 1939ல் 15 810 நடுநிலைப்பள்ளிகள்; 377,337ஆசிரியர்கள், 10,834,612 மாணவர்கள்,

மேற்படிப்புக் கல்லூரிகள் 1914ல் ருஷியா முழுமைக்கும் 91 இருந்தன. இவற்றில் 35 பீட்ரோகிராடில், 20 மாஸ்கோவில், மொத்தம் 112 000 மாணவர்கள் பயிற்சிபெற்றனர். இப்பொழுது, கல்லூரியோ, பல்கலைக்கழகமோ இல்லாத ஊரோ, நகரமோ கிடையாது விஞ்ஞான ஆய்வுச்சாலைகள், தொழிற்கல்விகள் பெரிதும் முன்னேறிவிட்டன. முக்யமாக எஞ்ஜினியரிங், மருத்துவம், உழவு முதலியன சிறப்பானவை, இவைகள் தான் செஞ்சேனையின் முதுகெலும்பாக அமைந்துள்ளன.

ஓய்வுநேரத்தைக் கழிக்க தொழிலாளர்களுக்கு ருஷ்யநாடு செய்துள்ளதைப் போல வேறெந்த நாடும் செய்யவில்லை. 'செய்யலாமா?' என்ற எண்ணம் கூடப் பிறந்ததில்லை. இப்பொழுது ருஷ்யாவில் 111000 பொழுது போக்கும் உல்லாச இடங்கள் இருக்கின்றன. 86,266பொது நூல் நிலையங்களும் 166,000,000 அதற்கான புத்தகங்களும்இருக்கின்றன.

புத்தகங்கள் வெளியிடுவதில் ருஷ்யாவிற்குத் தனிப் பெருமைஉண்டு. 1938ல் கணக்கின்படி வெளியிடப்பட்டபுதுநூல்களின் தொகை 40,000—த்தைத்தாண்டியது. பிரதிகளின்எண்ணிக்கை 69-கோடி 27-லட்சத்தைக்கடந்து நின்றது. உதாரணமாக கீழேகொடுக்கப்பட்டுள்ளபுள்ளி விவரம் நாட்டிலே பரவியுள்ள கல்வி உணர்ச்சியை வெளிப்படுத்தும்,

| ஆசிரியர்: | பிரதிகள் ஆயிரக் கணக்கில் | வெளியிடப்பட்ட மொழிகள்: |
|---|---|---|
| கார்க்கி | 39 876 | 65 |
| புஷ்கின் | 29 840 | 72 |
| டால்ஸ்டாய் | 20 916 | 57 |

(அடுத்த பக்கம் பார்க்க)

# திராவிட நாடு

காஞ்சி 18—11—45 ஞாயிறு


## நமது காணிக்கை

மக்கள் மக்களாக வாழமுடியும்: விதியோ, வினையோ, கர்மபலனோ, கடவுளோ மதமோ மாயாவாதத் தூபங்களோ, மனித சமுகத்தில் உயர்வு தாழ்வு கற்பித்திருப்பதை, மனிதனுக்கு மனிதனை அடிமைப் படுத்திவைத்திருப்பதை ஒரு நொடியில் உடைத்தெறிய மனிதனால்முடியும் என்பதை உலகுக்கெடுத்துக் காட்டி, அரசியல் அமைப்பு மாறினால், செல்வர் இறுமாப்பு குலைந்தால், பணம் ஒரு சிலருக்கே உரியதென்ற நிலைதகர்ந்தால், வறுமை, பிணி, துயர், கவலை போன்ற வாழ்க்கைப்போராட்டங்கள் மறைந்து, மக்கள் சரிநிகர் சமானமாக வாழமுடியும்என்பதைமெய்ப்பித்து, ஒருபுதிய சகாப்தத்தை உலகிடைத் தோற்றுவித்து, அதை வெற்றிகரமாக நடத்திப்புகழ் அடைவதற்குக் காரணமாயிருந்த புரட்சி 25ஆண்டுகளுக்கு முன் இந்த நவம்பர் திங்களில்தான் நடைபெற்றது.

ஆம். அந்தப்புரட்சியில் இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தது. அந்த இரத்த வெள்ளத்தில், மனிதன்தன் அடிமைத்தனத்திற்கு, தன் வறிய வாழ்விற்கு, பிணிகளுக்கு, கவலை, துன்பம் போன்றவைகளுக்குக்காரணம் தன் தலை எழுத்து, கர்மவினை, கடவுள் விதித்தவிதி என்றெல்லாம் எண்ணிக் கிடந்த மூடநம்பிக்கைகளெல்லாம் அடித்துக் கொண்டு போய்விட்டது; முதலாளி—தொழிலாளி, ஏழை—பணக்காரன், என்ற பேதங்களின்றி எல்லா மக்களும் சமநிலையில் எல்லாவித உலக இன்பங்களும் பெற்று, சிறந்த ஆட்சி புரியக்கூடும், அவ்வாட்சியும் பிறநாடுகளைவிடச் சிறந்திருக்கக்கூடும் என்னும் உளவலியை ஏற்படுத்தி வைத்துவிட்டது. அம்மட்டோ! போர்வரினும், வல்லரசுகள் தாக்கினும், அணுகுண்டுகளே வீசப்படினும் அஞ்சோம் என்ற நெஞ்சுறுதியும், நாட்டுப்பற்றும் மக்களிடை உண்டாகி விட்டது. இவைதாம் அந்தப்புரட்சியின், இரத்த வெள்ளத்தின் பலன். அந்தப்பலனை லெனின் நாட்டவர்—சோவியத் ரஷ்யர் இன்று அனுபவித்து மகிழ்ச்சியான, பிணிகளற்ற, வறுமை தலைகாட்டமுடியாத, அதியுன்னத வாழ்வுவாழ்ந்துகொண்டிருக்கின்றனர். உலகிற்கு அரசியல் அறிவு, வீரம், நெஞ்சுறுதி, முதலியவற்றைப் போதித்து, உலகின் முதல் வல்லரசநாட்டினராக விளங்கிவருகின்றனர்.

அத்தகைய புரட்சியை இன்று உலகின் எல்லா நாட்டுமக்களும்—பாட்டாளிகளும் — கொண்டாடி மகிழ்கின்றார்கள். அத்தகைய புரட்சி தத்தம் நாட்டில் ஏற்படாவிட்டாலும் அந்நாட்டின் அரசியல் சிறப்பு தத்தம் நாடுகளில் ஏற்படவேண்டுமென்ற விருப்பம் உலக மக்கள் அனைவர் உள்ளத்திலும் தோன்றிவிட்டிருக்கிறது.

ருஷ்ய நாட்டில் கொண்டாடப்படும் இப்புரட்சிவிழாவின் நோக்கம் உலகெங்கும் வரவேற்கப்படும் இந்நிலையில், நாமும் அந்நாட்டுக் கொள்கைகள் அடங்கிய கட்டுரைகள் சிலவற்றை வெளியிடுகிறோம், நமது காணிக்கையாக. வாழ்க சோவியத்! பரவுக பாரெங்கும் சமதர்ம மணம்!! —

### தஞ்சைமாவட்டத் தோழர்களுக்கு

11-11-45ல் நமது இதழில்குறிப்பிட்டபடி, தோழர் அண்ணாதுரை கும்பகோணம்துவாரங்குறிச்சித்தெருவில்உள்ள இளைஞர் கழகத் திறப்பு விழாவிலும்; சுவாமிமலையில் இலவசவாசகசாலை ஆண்டு விழாவிலும், மாயவரத்தில் திராவிடர் கழக ஆண்டுவிழாவிலும், பொதுக்கூட்டத்திலும், நாகையில் தேசியஉயர் நிலைப் பள்ளித்தமிழ்க்கழகத்திலும் கலந்துசொற்பொழிவாற்றி, மீண்டும் தம்முடைய சுற்றுப்பிரயாணத்தைத் தொடர்ந்துமுடிப்பதற்கு இயலாதபடி ஜுரத்தால் பீடிக்கப்பட்டு, டாக்டரின் யோசனையின் பேரில் நாகையிலிருந்துநேரே காஞ்சிபுரத்துக்குத் திரும்ப வேண்டியதாயிற்று என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம். உடல்நலிவு செம்மையானதும் எஞ்சியுள்ள நிகழ்ச்சிகளைத் தேதி குறிப்பிட்டு நிறைவேற்றி வைக்கப்படும். அன்பர்கள் பொறுத்தருள்க.

### சுயமரியாதைத் திருமணம்

பெரம்பலூர் தாலுக்கா கொளக்காநத்தம்மணமகன்இல்லத்தில் 28—10—45ல் தோழர் பி. சிவபிச்சை தலைமையில் தோழர் பி. ஜெகன்னாதனுக்கும் தோழியர் எம். கனகம்மையாருக்கும் சுயமரியாதை முறைப்படி வாழ்க்கை!ஒப்பந்தம் நடைபெற்றது. இதன் நினைவாகத் திராவிடநாடு, பத்திரிகைக்கு 1. ரூபாய், நன்கொடை அனுப்பப்பட்டது.

5-ம் பக்கத் தொடர்ச்சி

| | | |
|---|---|---|
| செகாவ் | 15,326 | 56 |
| டர்ஜினீவ் | 9,906 | 39 |
| செக்கராசாவ் | 8250 | 27 |
| கொகேல் | 7731 | 33 |
| மயக்காவ்ஸ்கி | 7150 | 31 |
| செட்ரின் | 6755 | 26 |
| லெர்மண்டாவ் | 5383 | 42 |
| ஷெவ்செங்கோ | 4817 | 33 |

பிறநாட்டு நல்லறிஞர், கவிவாணர், நாடகாசிரியர் இவர்களுக்கு ருஷ்யாவில் என்றைக்கும் செல்வாக்கு உண்டு. அந்தச்செல்வாக்குச்செழுமையாகவளர்ந்தது புரட்சிக்குப் பின்.

(ஆயிரக்கணக்கில்)

| | 1894-1916 | 1917-1940 |
|---|---|---|
| மப்பஸாண்ட் | 1517 | 3234 |
| ஹியுகோ | 466 | 2886 |
| ஜோலா | 939 | 2109 |
| டிக்கன்ஸ் | 850 | 2086 |
| ரோலண்ட் | 24 | 2036 |
| பால்ஸக் | 106 | 1743 |
| அனதோல் பிரான்ஸ் | 523 | 1788 |
| ஷேக்ஸ்பியர் | 611 | 1209 |
| ஹைனே | 124 | 1070 |
| ஷில்லர் | 455 | 525 |
| கெதே | 246 | 482 |
| பைரன் | 178 | 488 |

அமெரிக்க ஆசிரியர்களில் ருஷியாவில் பெரிதும் மதிக்கப்படுபவர்களும், விற்ற அவர்களுடைய புத்தகங்களின் எண்ணிக்கையும் ஜாக்லண்டன் (64லட்சம்) அப்டன்சின்கிளர் (26லட்சம்) மார்க்ட்வெயின் (20லட்சம்) ஹென்றி (11 லட்சம்)

நாடக சினிமாக்கொட்டகைகள் ருஷியாவில் அதிகம். கோவிலுக்குச்செல்பவர்கள் தொகைகுறையக்குறைய, இந்தப் பொழுதுபோக்குகளில் மக்கள்பெரிதும் ஈடுபட்டுவிட்டனர். அவைகளில்நடக்கும் நிகழ்ச்சிகள் கல்விபுகட்டுவதாகவும், இளைஞர்களை நல்வழியில் செலுத்துவதாகவும் இருக்கும். மொத்தம் 850 நிலையங்கள் இருக்கின்றன. இவைகளில் 275கிராமங்களிலும், 173, பிள்ளைகளுக்காகவும் இருக்கின்றன.

---

### இறுதிக்கடன்

31—10—45ல் இயற்கைஎய்தியகாஞ்சிபுரம் தனக்கோட்டி அம்மையாரின் (C. V. M. அண்ணாமலை அவர்களின் துணைவி) இறுதிக்கடன் 15—11—45ல் தோழர் வேணுகோபாலர் அவர்கள் தலைமையில், தோழர்கள் கீ. இராமலிங்கனார். ஈழத்தடிகள் ஆகியவர்களின் சொற்பொழிவுகளுடன் சிறப்பாக நடைபெற்றது.



9ம் பக்கத் தொடர்ச்சி

பப்பட்டது. முதலாளிமார்களின் பத்திரிக்கைகள் பறிமுதல்செய்யப்பட்டன.

பலமான எதிர்ப்புப்படை போல்ஷ்விக்கர்களுக்குத்தொல்லை கொடுத்தது. கொரன்ஸ்கியின் காசக்படை இன்னும் இரண்டொருநாட்களுக்குள் தலைநகருக்குள் வந்துவிடும். மாஸ்கோவில்இன்னும் சரியான எழுச்சிவரவில்லை. கீவ்நகரில் ஆயுதசாலையும், தந்திநிலையமும் போல்ஷ்விக்கர்கள் கையில்விழுந்தது. என்றாலும் காசக்வீரர்கள் அவர்களை விரட்டிவிட்டார்கள். பிரிட்டிஷ், பிரெஞ்சு அரசாங்கத்தார்கள் பழைய அரசாங்கத்திற்கே ஆதரவு தந்தனர்.

எனினும் புரட்சிப்புயலை அடக்கமுடியாது. பால்டிக்கடற்படை போல்ஷ்விக்கர்களுக்கு ஆதரவுதந்தது. காசான்என்ற நகர்முற்றிலும் புரட்சியில் சேர்ந்துவிட்டது போல்ஷ்விக்கர்கள்தனியாகஇல்லை. அவர்கள்பகுதியில்மக்கள்—தொழிலாளிகள், போர்வீரர்கள்—எதற்காக? புரட்சியைக்காப்பாற்ற வெகுண்டெழுந்த வேங்கைகள்!

* * *

நவம்பர் 10ந்தேதி முதலாளிகளின் பத்திரிக்கைகள் அநேகமாக நின்றுவிட்டன. ரஷியாமுழுமைக்கும்சிவப்புக்காவற்படையினர் திரட்டப்படுகின்றனர். கீவ் நகரில் காசக்வீரர்கள் புரட்சிவீரர்களைச் சிறைபிடித்தனர். கலிடின்டான் வெளியில் சோவியத் சபைகளை கலைத்துக்கொண்டுவடக்கு நோக்கிவந்தான். இரயில்வே இன்னும் போல்ஷ்விக்கர்களுடன் சேரவில்லை. கொரன்ஸ்கி பிட்ரோகிராடை நோக்கிப் பலமானபீரங்கிபடையுடன்வந்துகொண்டிருந்தான்.

மறுபக்கத்தில் மாஸ்கோ திரண்டெழுந்தது. கிரம்ளின்மாளிகை புரட்சிக்காரர்வசமாகியது, பலப்பல ஊர்களின் புரட்சியின் எதிரொலிகேட்டது. தலைநகரைக்காப்பாற்றமக்கள் சாடினர். கையில் கிடைத்ததெல்லாம் ஆயுதம் — துப்பாக்கி, மண்வெட்டி, கோடரி, அரிவாள்—தெருக்களிலெல்லாம் மக்கள். எதிர்ப்பாளனுக்கு இறப்பு என்ற முழக்கம். பெண்கள், குழந்தை, முதியோர், தொழிலாளி பஞ்சை, அனைவரும் யுத்தவீரர்கள்.

நவம்பர்11ந்தேதி புரட்சிக்குஎதிர்ப்புத் தலைதூக்கியது. அதைஇப்பொழுதுஅலட்சியப்படுத்தமுடியாது. பீட்ரோகிராடில் எங்கும்வெடிச்சத்தம், தந்திநிலையம் எதிர்ப்புப்படையால் பிடிக்கப்பட்டு விட்டது. புரட்சிவீரர்களின்இரத்தம் தலைநகரின்பிணங்களின்மேல்நடந்துதான் தந்திநிலையமும், டெலிபோன் கட்டிடமும் பிடிக்கப்பட்டது.

மாஸ்கோவில் புரட்சிப்படைகிரம்ளின் மாளிகையிலிருந்து விரட்டப்பட்ட எதிர்ப்புப்படை ஏற்றுக்கொண்டது. புரட்சி வீரர்கள் பதினாயிரம்பேர்களேஇருந்தனர், எதிர் பகுதியில் ஆறாயிரம் வீரர்கள், இருபத்தையாயிரம் காசக் வீரர்கள், இரண்டாயிரம் வெள்ளைக்காவற்காரர்கள் —எனினும் புரட்சி காப்பாற்றப் படவேண்டும்.

போல்ஷ்விக்கர்கள் கூவுகின்றனர். "அதிகாரம் நம்கைக்குவந்தது. அதை நழுவவிடக்கூடாது." ட்ராட்ஸ்கியோ, பெருத்த குரலில்—'நம்முடைய விவாதங்கள் தெருக்களில், இப்பொழுது பீரங்கி வாய்கள் தான் பேசவேண்டும்"

* * *

நவம்பர் 12ந்தேதி கலக்கம் நிறைந்த நாள். கொரன்ஸ்கியைப்பற்றித்திகில்அதிகரித்தது. பாங்குகள் வேலைசெய்யவில்லை. அரசாங்கபாங்கு லெனின் ஆணைக்கு அடங்கமறுத்தது. பழையஅரசாங்கசபையின்கூச்சல் குறையவில்லை. மாஸ்கோவில் எதிர்ப்புக்குறைந்துவிட்டது. தூரத்திலுள்ள சிறு சிறு கிராமங்களுக்கெல்லாம் இப்பொழுதுதான் புரட்சிச்செய்திசேர்க்கப்பட்டது. ஒன்றன்பின் ஒன்றாக சோவியத் முறைக்குத் திரும்புகிறது. எனினும் ருஷியா முழுவதும் பீட்ரோகிராட் நிலையை எதிர்பார்த்துக்கொண்டு, மேற்செல்லாது தயங்கிக்கொண்டிருந்தன. தாராசுமுனை நோக்கிறது. புரட்சி புதைந்துவிடுமா? ஆமாம்என்றனர்எதிர்க்கட்சியினர். வினையநாட்டுப் பிரதிநிதிகளும் தலையசைத்தனர்.

இரவுமூன்றுமணி திடீரெனஓர்செய்தி வந்தது. கொரன்ஸ்கியின் முயற்சிசிதறடிக்கப்பட்டது. புரட்சிப்படை முன்னேறுகிறது. முன்னேறு!முன்னேறு!புரட்சியே எறிநின்று எங்கும்பார்!

* * *

நவம்பர் 13! வெற்றிநாள்! தலைநகரை நெருங்கிய காசக்படை வீரர் மக்கள் படைக்குமுன்சிதறியோடினர். இனிமேல் தயக்கம் வேண்டாம். எதிர்த்துப் போர் செய்—சமாதானத்திற்காக, உணவிற்காக உரிமைக்காக, நிலத்திற்காக.

உள்நாட்டிலிருந்துசெய்திகள்:

கருங்கடலில் கடற்படையினர் சோவியத்பக்கம் சேர்ந்தனர். செபஸ்டாபூல், நோவரிரோட் துறைமுகங்களில் செங்கொடி.

மாஸ்கோவில் சண்டை! சரணடைய மறுத்தால் கிரம்ளின்மாளிகைமீது பீரங்கிப்பிரயோகம்! 'பழங்கட்டிட மாயிற்றே!

கலையை அழிக்காதே'என்றகூக்குரல். பாதகமில்லை என்றபீரங்கிசொன்னது.

முழுருஷியாவும்கொந்தளிக்கும்கடல். புரட்சிச்செய்தி, பட்டிதொட்டிகளிலெல்லாம் கொழுந்துவிட்டெரிகிறது. வாழ்த்துக்கள், நன்றிகள், உறுதிகள், வெற்றிச் செய்திகள், லெனின் மாளிகையில் வந்துவிழுகின்றன.

ருமேனியா முனையைத்தவிர மற்ற எல்லாப்போர்க்களங்களும் சோவியத்திற்கு பலமான ஆதரவு தந்தன.

எதிர்க்கட்சிகள் திகைப்படைகின்றன. சமாதானத்திற்குவர கொரன்ஸ்கி தயாராகஇருக்கின்றார்.

நின்றுபேச நேரமில்லை, வீரலெனின் புன்னகைத்து செல்கிறார்.

வெள்ளிகளையாடிய பிறநாட்டு பத்திரிக்கைக்காரர்கள் 'அறிக்கை எங்கே?'என்று ட்ராட்ஸ்கியைக் கேட்கின்றனர். 'அறிக்கை? அதோ! வெடிக்கும்பீரங்கியின்வாய் பலமாகச்சொல்லவில்லையா?' என்கிறார் ட்ராட்ஸ்கி.

உலகம் உணர்ந்தது புரட்சியென்று, இதுவரை கவிஞரின் கனவிலே வாழ்ந்தாய். ஏட்டிலே தவழ்ந்தாய், இளைஞர்களின் இதயங்களிலே இருந்தாய், பேச்சின் ஆர்வத்திலே, உணர்ச்சிவேகத்திலே, காணப்பட்டாய். ருஷ்யாவில் வந்தாய், பிரான்சில் வந்ததைப்போல, ஆனால்வெற்றி பெற்றாய், விழவில்லை.

* * *

தொழிலாளிகளின் லெனின் கிராட் நவம்பர் 14ந்தேதி கண்விழித்தது. வெற்றி மணம்வீசியது. வீதிகளில் வீரர்கள் ஆர்ப்பாட்டம்.

சரி மற்றநகரங்கள், காசான்வெற்றி.

ரோலே கிராட், எதிரிகள்ஓடினர். கேள்விப்படாத சிற்றூர்கள், எதிர்பார்க்காத பேரூர்கள் எங்கிருந்தும்வெற்றி, வெற்றி!

மாஸ்கோ ருஷியாவின்உண்மையான தலைநகர். இருதயத்துடிப்பு. முதலாளிகளின் வசந்தமாளிகை கிரம்ளின் விழுந்தது. பாஸ்டில் விழுந்ததுபோல. வெள்ளைப்படை விரட்டப்பட்டது. போரிலே வீழ்ந்த செம்படையினர் கிரம்ளின்மாளிகையில் ஜார் அரசர்களின் கல்லறைகளுக்குப் பக்கத்தில் புதைக்கப்பட்டனர். குருமார்களைக்காணோமே? குருமார்களா? எதற்கு?

ருஷிய மக்கள் பரவுலகத்தை மறந்துவிட்டனர். அங்கே தங்களுக்கு வசதிகள் செய்துதர எந்தகுருமார்களையும்அவர்கள் அழைக்கவில்லை. ஏன்? மண்ணிலே விண்ணைக்காண்பிக்கச்செய்விலேஇறங்கிவிட்டனர். கல்லறைகளில் இறந்த செம்படையினர் சவப்பெட்டிகள் இறங்கிய பொழுது

[அடுத்த பக்கம் பார்க்க]

7-ம் பக்கத் தொடர்ச்சி

புதியருஷியாவில் அடிப்படைதோண்டப் பட்டுவிட்டது.

* * *

நவம்பர் 15ந்தேதியில் பழைய அரசாங்கம் இருந்த இடமே தெரிய வில்லை. குருமார்கள் வழிபாடு செய்வதை விட்டுவிட்டனர். லெனின்கூறியபடி 'அதிகாரத்தை ஆளும்காலம்' ஆரம்பமாகியது. அரசாங்கம் ஒழிந்தபோதிலும் எதிர்க்கட்சியினர் கையில் நாட்டின் பொருளாதார நிலை இருந்தது. அரசாங்க உத்தியோகஸ்தர்களின் வேலைநிறுத்தம், பாங்குகளின் கதவடைப்பு,வர்த்தகக்கடைகளின் ஒத்துழையாமை, புரட்சி அரசாங்கத்தை அல்லற்படுத்தின. வெளிநாட்டு அதிகாரிட்ராட்ஸ்கிக்கு பழைய ஒப்பந்தங்கள் கிடைக்கவில்லை. அவருடன் ஒத்துழைக்க மறுத்து அந்தப்பகுதியைச்சேர்ந்த அனைவரும்வெளியேறினர். கொல்லன்டாய் உள்நாட்டு நலனுக்குஅதிகாரி, பொது அதிகாரிகளில் பலரைக்கைதுசெய்து அவர்களிடமிருந்து சாவிகள் பெற்றபின்புதான் காரியங்களை நடத்தமுடிந்தது. பலத்த எதிர்ப்புகளுக்கிடையேதான் அரசாங்கம் காரியங்களைச் செய்யவேண்டிநேரிட்டது. ஆனால் அடுத்த நாள் நிலைமை முன்னேற்றமடைந்தது, கெரன்ஸ்கியின் ஓட்டமும், சோவியத்து ஆட்சிக்கு ருஷியாமுழுவதிலும் ஏற்பட்ட அபரிமிதமான வெற்றியும் நிலைமையை மாற்றியது. நிலையான சோவியத் ஆட்சி உறுதிப்பட்டது. ஆனால் இன்னும் உருக்கொள்ளவில்லை. நாட்டிலே தேர்தல்நடைபெற்றபின், அவர்கள் பெரும் பகுதியினராக வந்தபொழுதுதான் ஆட்சிநிலைபெற்றது.

அயல்நாடுகள் முதலில் அலட்சியம் செய்தன. பின் அறிக்கைகள் விட்டன. முடிவில் வெள்ளையாட்சிக்குப் பலமாகச் சேனைகள் அனுப்பின. கிழக்கோடியில் ஜப்பானின் தடபுடல். கருங்கடலில்பிரஞ்சுப்படை. தென்மேற்குப்பகுதியில் ருமேனியப் போர்க்களம். மேற்குப்பகுதியில் ஜெர்மனியின் படைகள். ஆர்ச்வஞ்சலில் ஆங்கில அமெரிக்கப்படைகளின் ஆரவாரம். உள்நாட்டிலே டெனிகின், ராங்கல் போன்ற கலகப்படைத் தலைவர்கள்; சீர்படாதநாடு செம்மைஅடையாத அரசாங்கம் பக்குவப்படாத தொழிலாளிகள் பாசறைகாணாத போர்வீரர்கள்.

அலைகள் மலையென எழுந்து மோதுகின்றன எனினும் கடற்பாறை கருத்தழிவதில்லை அந்தக் கடற்பாறையின்மீது இரண்டு உருவங்கள்—லெனின், ஸ்டாலின்.

கடலொலியைப் பிளந்து கொண்டு உலகத்தொழிலாளர்களே ஒன்று படுங்கள்! புரட்சிவாழ்க! என்றபேரொலி கிளம்புகிறது.

---

# எஃகு உள்ளம்

அரசியல் கலகங்களை அடக்குவதில் ஜார் அரசாங்கம் அதிக அக்கறைகாட்டி வந்தது. அந்தச்சமயத்தில் பக்கு என்ற இடத்தில் இருந்த அரசியல் கைதிகள் ஆரவாரம் செய்தால், அரசாங்கப்படை சும்மாவிட்டு விடுமா? குழப்பம்நடந்த மறுநாள் அரசாங்கப்படை அந்தச்சிறைக்கு வந்தது. போர்வீரர்கள் இரண்டுவரிசையாக ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டுநின்றனர். கைதிகள் ஒவ்வொருவராக இருவரிசைகளுக்கும் இடையில் அனுப்பப்பட்டார்கள். போர்வீரர்கள் தங்களுடைய துப்பாக்கியின் அடிக்கட்டையால் பலங்கொண்டமட்டும் அடிப்பார்கள். இத்தகைய வரவேற்புகளை ஏற்றுக்கொண்டு, மறுபக்கத்தில் வெளிப்படுவதற்குள் உயிர்நிலைப்பதே அரிது. கதறிக்கொண்டு ஓடுகின்ற கைதிகளைக்கண்டால், காவல்காரர்களுக்குக்கூட சிறிது சலிப்புத்தோன்றி மறையும். அன்றுபக்குச்சிறையில் அதிசயசம்பவம் ஒன்றுநடந்தது.

அடிபட்டகைதிகளில் சோசோவும் ஒருவன். அவன் மற்றவர்களைப்போலக் குழப்பம் செய்யவில்லை. இருந்தாலும் அவனும் அரசியல் கைதிதானே! எனவே அடிக்கப்பட்டான். சோசோ மற்றவர்களைப்போலக்கதறிக் கொண்டு ஓடவில்லை. நிதானமாக, ஒரு பொதுவுடமைப்புத்தகத்தைப் படித்துக்கொண்டே நடந்தான். எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டு வெளியேறினான். முகத்தை நன்றாகப்பாருங்கள். கலக்கமற்ற முகம், துன்பத்தை ஏளனம் செய்யும் கண்கள், கஷ்டத்தைக்கட்டுப்படுத்தும் உதடுகள், சகிப்புத்தன்மைக்குக்கூடமாக விளங்கும் கன்னங்கள். பாவம், சோசோ! எத்தகையஉறுதியான உள்ளம் என்பீர்கள்.

நன்றாக உற்றுப்பாருங்கள்.

யாரது ஸ்டாலினா?

ஆம், ஸ்டாலின்தான். அவரது அந்தக் காலத்துப் பெயர் சோசோ.

## திருமணம்

19—10—45ல்மதுரை தோழர் கந்தசாமிக்கும் விருதுநகர் காசியம்மாளுக்கும் பெண் வீட்டில் மதுரைநகரதிராவிடர்கழகச்.செயலாளர்தோழர் சி. முத்திருளாண்டி தலைமையில் வாழ்க்கை ஒப்பந்தம் நடைபெற்றது. திராவிடநாடுவளர்ச்சிக்கு ரூபாய்ஒன்று நன்கொடைகொடுக்கப்பட்டது. 24—10—45ல் மதுரை டவுன் அழகாடி சிதையம்மன்கோவில் தெருவில் தோழர் ஆ மீனாட்சிசுந்தரத்துக்கும், காளியம்மாளுக்கும் வாழ்க்கைஒப்பந்தம் நடைபெற்றது. பண்டிட் கே. முத்துசாமி தலைமைவகித்தார். தோழர் கே. வி. அழகர்சாமி திருமணத்தை ஆதரித்துச் சொற்பொழி வாற்றினர். சி. முத்திருளாண்டி நன்றிகூறினர். திராவிடநாடு பத்திரிக்கைக்கு ரூபாய் ஒன்று நன்கொடை அளிக்கப்பட்டது.

## காரைக்குடியில் 'கவியரசர்'

26—10—45ல் இந்நகர் S. M. S. உயர் நிலைப்பள்ளியில் திராவிடர்கழகத்தின் சார்பில் 'கவியரசர்' 'பாரதிதாசன்' அவர்கள் "நான்கண்ட பாரதி" என்னும் தலைப்பில் $3\frac{1}{2}$-மணிநேரம் இன்றையபுலவர்களின்நிலை புராணங்களின் நிலை ராமாயணத்தினால் ஏற்படும் கெடுதி. முதலியவைபற்றி விளக்கமாகச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். பலசங்கங்களின் சார்பில் மலர்மாலைகள் அணிவிக்கப்பட்டன. 1000-த்திற்குமேற்பட்டசகலகட்சிக்காரர்களும் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

## லால்குடி தாலுகா, திராவிட கழக அமைப்பு

வை தாலுகா திராவிடர் கழகத்தை ஆரம்பிக்கவும, அதற்கான நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கவும் லால்குடி செட்டிமார்மடத்தில் 21—11—45 மாலைமணி 3க்கு நிர்வாகக்கூட்டம்நடைபெறும். அதுபோது தாலுக்காவில் உள்ள சகலதிராவிடத்தோழர்களும் கலந்துகொள்ளுமாறும் வை கழக அமைப்பில்பங்கெடுத்துக்கொள்ளுமாறும் கோரப்படுகிறது.

## கிருஷ்ணன் — பாகவதர் சார்பில்

### கருணை மனு

என். எஸ். கிருஷ்ணன், எம். கே. தியாகராஜபாகவதர் ஆகியவர்கள் சார்பில் கருணைகாட்டி விடுதலை செய்யுமாறு கவர்னரிடம் விண்ணப்பித்துக்கொள்ளுவதற்கென்று தோழர் ஜி. டி. நாயுடு, சர் பி. டி. ராஜன், திவான்பகதூர் சி, எஸ். ரத்னசபாபதி முதலியார், டாக்டர் அழகப்ப செட்டியார், தோழர் பி. பாலசுப்ரமண்ய முதலியார் ஆகியோரடங்கிய தூதுக்கூட்டம் ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது என்று அறிந்து மகிழ்கிறோம்.



# பாரைக் குலுக்கிய பத்து நாட்கள்

—(செழியன்)—

1914ல் ஜெர்மனிப்போர் மூண்டது. ருஷ்ய மன்னனும் தன்படையை அனுப்பிவைத்தான். ஆனால் போர்வீரர்களுக்குத்தேவையான உணவும், உடையும், போர்முனைக்கு அனுப்பப்பட வில்லை. உணவுப்பஞ்சம் நாட்டை அல்லற்படுத்தியது. போக்குவரவு சீர்கேடடைந்தது. போர்முனையில் தோல்வி மக்களுக்குத் திகிலை உண்டாக்கியது.

1917 மார்ச்சில் குமுறிக்கொண்டிருந்த எரிமலை வெடித்தது. மன்னனாட்சி மண்ணைக்கவ்வியது. அத்துடன் ருஷிய நாட்டுமக்கள் திருப்தி அடைந்திருந்தால் பிரான்சு, அமெரிக்காபோன்றகுடியரசு நாடாகவோ அல்லது இங்கிலாந்துபோன்ற கட்டுப்பட்ட முடியரசாகவோ ருஷியா இன்று இருந்திருக்கும். சிகப்புருஷியா வாகச்சிறப்பெய்தி இருக்காது.

நவம்பர் வந்தது, பொறுக்கமுடியாத ருஷிய மாரிக்காலமும் பிறந்தது. தோல்வியிலே உழன்று, குளிரால் நடுக்குற்று, பசியால்வாடிப்,போர்வீரர்கள் உயிர்துறந்தனர். உடை, உணவுப்பஞ்சம் அதிகரித்தது. நாடுநலிந்தது. அரசாங்கத்தின் தலைவனாகஇருந்த கெரன்ஸ்கியால் எத்தகைய உறுதியான உதவியையும் அளிக்கமுடியவில்லை. மக்கள் கலங்கினர். அப்பொழுது போல்ஷ்விக்கட்சி மிகச்சிறியகட்சி. அவர்களுடைய,சமாதானம், உணவு, நிலம், எனும்முழக்கம்நலிவுற்ற உளத்தைப்புலியுளமாகச் செய்தது. அந்த முழக்கம் அவர்களைப்புரட்சியின் முன்னணியில் கொண்டுவந்து நிறுத்தியது. அப்பொழுததான் லெனினின் உருவம் தென்பட்டது, ட்ராட்ஸ்கியின் குரல்கேட்டது.

படைவீரர், உழவாளிகள், தொழிலாளர் இவர்களின் சபைகளுக்கு சோவியத் என்று பெயர். அகிலருஷிய சோவியத் நவம்பர் 7ல் கூட்டவேண்டிய அவசியம் அரசாங்கத்திற்கு வந்துவிட்டது.போல்ஷ்விக்கர்கள் எழுச்சிக்குத்தயாராகி விட்டனர். புரட்சிப்படைக்குழு ஆரம்பிக்கப்பட்டது.சிகப்புக் காவல்காரர்கள் துப்பாக்கிகளுடன் வெளிவந்தனர். அவர்களை அடக்க அரசாங்கத்திற்குத்திறமையில்லை. மற்றக்கட்சிக்காரர்கள் கூக்குரலிட்டனர், பலனில்லை, அவர்களும் ஆயுதம்செய்தனர். கூட்டங்களிலே பலத்தஎதிர்ப்புகள், குறுக்குப்பேச்சுகள் அதிகமாயின. எழுச்சிக்குநாளும் குறிப்பிடப்பட்டது'நவம்பர் 6-ந்தேதி ருஷியாமுழுமையும் தயாராக இருக்காது, மாறாக 8-ந்தேதி சோவியத் சபையைச் செயலுக்குஇழுக்கமுடியாது. அதிகாரத்தை நாம் கைப்பற்றவேண்டும். அப்பொழுததான் சோவியத்கூடியதும் இதோ, எனக்கொடுக்க முடியும்" என லெனின் வரையறுத்துக்கூறினர்.

* * *

புதன்கிழமை பூத்தது. நவம்பர் 7 வந்தது. அதிகாரங்களனைத்தும் சோவியத் கையில்—,சமாதானம், உணவு, நிலம், என்றபேரொலி எழுந்தது போல்ஷ்விக்கர்களிடம்.அதைஎதிர்த்து மற்றக்கட்சிகளனைத்தும் ஐக்கியமுன்னணி அமைத்தன.

ஸ்டேட் பாங்கிற்கு [சர்க்கார் பாங்கிக்கு] முன்னால் காவல்காரர்கள். பீட்ரோகிராட் அரண்மனையில் (விண்டர்பாலஸ்) பயம்நிறைந்த அமைதி. பகல்முழுவதும் தலைநகரில் குழப்பமான நிலை. ஏனைய அரசியல் கட்சிகளுக்கு நிலைமைபுரியவில்லை. ஆனால் போல்ஷ்விக் கட்சி செயலில் இறங்கிவிட்டது.பீட்ரோகிராட் தொழிலாளி—போர்வீரர் சோவியத்கூடி 'அமைதி, உணவு, நிலம்'என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது.

இரவு 10-40-மணிக்கு ருஷியசோவியத்சபைகூடியது, அதற்குப்பலதிறப்பட்டகட்சியினரும் வந்திருந்தனர்.தலைமைக்குழுதேர்ந்தெடுக்கும் பொழுது தான் போல்ஷ்விக்கட்சியின் பலம் வெளிப்பட்டது. 25பேர்கொண்ட அந்தக்குழுவிலே லெனின், ட்ராட்ஸ்கி உள்பட 14 போல்ஷ்விக்கர்கள் காணப்பட்டனர். இதை மற்றக்கட்சிகள் பலமாக ஆட்சேபித்தன. அவர்களின் கூக்குரலுக்குப்பதிலாக திடீரென்று ஒருசத்தம் வந்தது.

சத்தம்—பலமான சத்தம். ஆமாம்! குண்டுகளின்சத்தம்.இங்கேதிட்டங்களைத் தீட்டிக்கொண்டிருந்தனர். மக்கள் அந்தக் கட்டத்தைத்தாண்டிவிட்டனர்.மக்களின் பிரதிநிதிகள்தொண்டைகிழியப் பேசினார்கள். ஆனால் வெளியே பீரங்கியின் வாய் முணுமுணுத்தது பீட்ரோகிராடின் அரண்மனை சிகப்புக்காவல்காரர்கள் கையிலே சிக்கிவிட்டது. அங்கு வெடித்த ஒலிதான் சோவியத் சபையின் காதுக்குஎட்டியது. அந்தவெறுப்பான ஒலியில்அடக்கப்பட்ட உணர்ச்சிகள் குமுறிக்கொண்டு வெளிப்பட்டன. புதியமுறைக்கு, புதியகாலம்—புதியருஷியா பிறக்கிறது.

சோவியத்சபை லெனினின் திட்டங்களை ஏற்றுக்கொள்கிறது. "போர் முனையில் நியாயமான முறையில் சமாதானம், தொழில் முறைகளின் பிடிப்பு பாட்டாளிகளின் கையில் நிலங்கள் உழவாளிகளுக்குப்பிரித்துக்கொடுக்கப்படும்'என்ற தீர்மானம்நிறைவேறுகிறது. சபைகலைந்தவுடன், அதற்குவந்திருந்த பிரதிநிதிகள் தத்தம்ஊர்களுக்குச் செல்கின்றனர்சிகப்புச்செய்தியைத்தெரிவிக்க.

சபைகலையும்பொழுது வடக்குப்போர் முனையிலிருக்கும் சேனையிடமிருந்து புதிய அரசாங்கத்திற்கு ஆதரவும் வாழ்த்தும் வருகிறது. எனினும் புதியவாழ்வு நிலைக்குமா என்பது சந்தேகம். பீட்ரோகிராடில் போல்ஷ்விக்கர்கள்அரசாங்கத்தைக் கைப்பற்றித்திட்டங்கள்போட்டுவிட்டார்கள். அவைகள்நிறைவேறவேண்டுமே?பால்டிக்கடலிலிருந்து மஞ்சள் கடல் வரை பரந்தருஷிய—உலகிலே ஆறில் ஒருபகுதியான ருஷியா—எழுச்சியைஏற்றுக்கொள்ளுமா? திட்டங்களை நிறைவேற்றுமா? இதே கேள்வியைத்தான் நவம்பர் 8-ந்தேதி (வியாழன்)மங்கியமாலைஎடுத்துக் கேட்டது.

ருஷியநாட்டின் குமுறல் அடக்கமுடியாதது என்பதுவெளிப்பட்டது. போல்ஷ்விக்கர்களின்மீது தாங்கமுடியாத வசைவு. பழிவாங்கும்படி பத்திரிக்கைகளின் தூண்டுதல். 'கொடுங்கோன்மை, கொடுங்கோன்மை' என்ற கொட்டை எழுத்துக்களில் சுவரொட்டிகள். இரயில்வேத்தொழிலாளர்கள் போல்ஷ்விக்கர்களுடன் சேரமறுக்கின்றனர். டெலிபோன்வசதிகள் குலைக்கப்பட்டன. தபாலிலாக்கா ஒத்துழைக்கவில்லை. கொரன்ஸ்கியின் பலம் இன்னும் உடையவில்லை. அரசாங்க அதிகாரிகளும், வேலைபார்ப்பவர்களும் வெளியேறினர். போல்ஷ்விக்கர்கள் சலிக்கவில்லை. லெனின் எதிர்ப்புகளைக்கண்டு அஞ்சாமல், எதிர்க்கட்சியினருடன் எத்தகைய சமாதானத்திற்கும் வரமறுத்தார். அவரின் தூண்டுதலால் சோவியத்சபை பலதீர்மானங்களை நிறைவேற்றியது. அவமதிப்பைத் தராதவகையில்,நியாயமான சமாதானத்தை ஏற்றுக்கொள்ள முற்பட்டது. மன்னனின், மதகுரு, தேவாலயங்கள், பெரும்பண்ணைகள்—இவர்களனைவருடைய நிலங்களை உழவாளர் சபைகளிடம் ஒப்படைக்கத் தீர்மானித்தது. புதியஅரசாங்கம்அமைக்கப்பட்டது. லெனின் (தலைவர்) ட்ராட்ஸ்கி (வெளிநாட்டுவிவகாரம்) ஸ்டாலின் (தேசீய இனங்களின் தலைமை) முதலியோர் அந்த அரசாங்கத்தில் இடம்பெற்றனர்.

போல்ஷ்விக்கர்களிடம் அதிகாரம்வந்தது. அதுநீண்டகாலைக்கு நிலைக்குமா? என்ற கேள்வி திகிலை உண்டாக்கியது.

நவம்பர் 9ந்தேதி டான் பிரதேசத்திலிருந்து, காசக்வீரர்களின் தலைவனான கலிடின என்பவனின்போல்ஷ்விக்எதிர்ப்பு தலைநகருக்கு எட்டியது. கொரன்ஸ்கி (பழைய அரசாங்கத்துத் தலைவன்) படைகளைத் தயாராகும்படி உத்தரவிட்டான். தந்தியிலாக்காவும், இரயில்வேயும் ஒத்துழைக்காததால்வெளியுலகிற்கும், ருஷியமுழுமைக்கும்செய்திகள் அனுப்பப்போல்ஷ்விக்கர்களால் முடியவில்லை. கடைசியாக விமானங்கள் மூலம்செய்தி அனுப்

(7-ம் பக்கம் பார்க்க)

# சீமாட்டியும் சம்மட்டியும்

"ஐயோ, வலிக்கிறதே! இதேன்ன வேலே! என்னாலே முடியாதுஇந்த இம்சையைப் பொறுத்துக் கொள்ள"

வார்த்தைகள், வேதனையை விளக்குவதாக உள்ளன, ஆனால் இந்த வாசகத்தைக்கூறிய குரலிலேயோ கீதம் இருந்தது! காரணம், அவள் ஒன்றும் அப்படிப் பிரமாதமான வேதனைப்பட்டுக்கொண்டுமில்லை, பழக்கமே இல்லாததால் பயந்து பேசவுமில்லை. அவள், அவனிடம் பெற்ற ஆயிரம் அந்தப் பேச்சுக்கும் சேர்த்துத்தான். அவளுடைய கன்னத்தைததான் அவன் கிள்ளினான்! அவளுக்குக் கஷ்டம் அதிகமா அதனால்! அதுவுமில்லை! பல காங்களின் சேஷ்டைகளுக்கு இடமளித்து அளித்து பழகிப்போன கன்னந்தான் அந்தக் கட்டழகிக்கு! ஆனால்வேதனையாக இருக்கிறது என்று இனிமையான குரலிலே பேசுவது அவளுடைய அன்றாடவாழ்க்கை முறையின் அங்கங்களிலே ஒன்று! அவளுடைய மேயுங்கண்கள், துடிக்கும் அதரம், கொடிஇடை, முதலியபலவற்றைப் புகழ்பவர்கள், அவளுடைய "ஐயோ வலிக்கிறதே" என்ற சொல்லிலே தோய்ந்துவரும் சோபிதத்தையும் சுவையையும் அதிகமாகவேபுகழ்வார்கள்.

அவள் ஓர் சீமாட்டி! பெரியமாளிகை! சவாரிசெய்ய அழகான குதிரைகள்! வேட்டைநாய்கள்! அவைகளைப்பராமரிக்கப்பலவேலையாட்கள்! இவ்வளவும் உண்டு. பிறகு சீமாட்டிதானே அவள்! அதிலும் சீமானின் பிரியத்தைச் சம்பாதித்துக்கொண்டவள். பிறகு அந்தப்பட்டப்பெயருக்கு அருகதை இல்லைஎன்றுயாரெண்ண முடியும்! அவள், பால்யவயதிலே, ஒரு பால்காரி, கொண்டகணவனை விட்டு ஓடிவந்து விட்டாள், கொவ்வைஇதழின் துணையன்றி வேறில்லை பராபரமேஎனத் திரிந்தாள். எப்படியோ அவளுடைய சாகசத்திலே சீமானொருவன் சிக்கினான், அவள் சீமாட்டியானாள், ஆனால் அவள் சிறுவயதிலே பாரிதான் என்பது பலருக்குத்தெரியும் ஒருவரும்வெளியேசொல்வதில்லை; யாராவது எதாவது ஆத்திரத்திலே அவளைப்பற்றிக் குறைவாகப்பேசியிருந்தாலும் நேரிலே காணும்போது,ஒரு சீமாட்டிக்குச் செய்யவேண்டிய மரியாதையைச் செய்யத் தவறுவதில்லை, ஏன்? அந்தமரியாதை, அவள் வாழ்ந்து வந்த மாளிகைக்கு, அதிலே மலரும் புஷ்பங்களுக்கு, அவள் அணிந்திருந்த ஆபரணங்களுக்கு, அவளுடைய அன்னநடைகண்டு அரசபரம்பரையிலுதித்த சீமான்கள் தந்த செல்வத்துக்கு,இவைகளுக்குத்தரப்பட்டமரியாதை அது. அவள் விபசாரி—கணவனை எய்த்தவள்—கட்டழகால்காளைகளை வென்றவள், ஆனால்யார் கூறுவர் அவளை விபசாரி என்று! அவளுடைய அன்புக்காக ஏங்கிக்கிடந்தனர் பல அதிகாரிகள்! ஏழைகளை வஞ்சித்துச் சீமான்கள் செல்வம் திரட்டினர், ஏமாந்தஏழை சிரம்தாழ்த்தினான்! சீமானைச் சிங்காரி சிறைப்படுத்தினாள், விபசாரம் என்ற ஆயுதபலம் கொண்டு. ஏழை, அவளை அறிவான்யார் என்று. ஆனால் கூறமாட்டான் அவள் சீமாட்டியானதால்,

ஆனால் அதேஏழை, பக்கத்துக் குடிசையிலே பரதவிக்கும் பெண்ணின் பார்வையிலே கூடத் தோஷம் கண்டுபிடித்து அவளுக்கு விபசாரிப்பட்டம் சூட்டிக் கண்டனத்துக்கு ஆளாக்குவான்! அவளும் "சீமாட்டி" யாகும வரையிலே, தூற்றலைப் பொறுத்துக் கொள்வாள்;சீமாட்டியாகி விட்டாலோ, தூற்றுவோர் துதிபாடத் தொடங்குவர்.

யார் அந்தச்சிங்காரி? ஒருவரா இருவரா, பெயர்கூற! புரட்சிக்குமுன்பு ரஷியாவிலேசெல்வத்தைத்திரட்டிக்கொண்டு சீமாட்டியாகி துதிபாடகர் புடைசூழக் கொலுவீற்றிருந்தவர்களின் தொகை அதிகம்! செல்வத்திலே புரளுபவர்கள் எப்படி அந்தச் செல்வத்தைப் பெற்றார்கள் என்ற சிந்தனையிலே மக்கள் சிரத்தை கொள்ளாத காலம் ஒன்று இருந்தது! வழுக்கி விழுந்த வனிதையானாலும், வாழ்க்கையிலே சீமாட்டியாக இருந்தால்போதும், மக்கள் துதிபாடகரவர்.எய்த்துக்கொழுத்தவனாக இருக்கட்டும், அவன் மாளிகையிலே இருந்தால் போதும், அவன்முன் மண்டியிடுவார்கள் எங்கே? புரட்சிக்குமுன் ரஷியாவிலே! லெனின் தந்தான், ஏழைகளுக்குச் சிந்தனைச் செல்வத்தை! அதன் துணை கொண்டபிறகு,ஏழை உணர்ந்தான் ஊரைமிரட்டும் சீமானும் உல்லாசத்தை வழங்கும் சீமாட்டியும், ஊமையாய் மக்கள் இருப்பதால்தான் வாழ்கிறார்கள் என்றஇரகசியத்தை.கிளம்பினான், கோபத்துடன், கொழுந்துவிட்டு எரிந்தது புரட்சி! புதுஉலகு பூத்தது!! புதிய ரஷியாவிலே, சீமானும் சீமாட்டியும் இல்லை, ஆணும் பெண்ணும் வாழ்கிறார்கள், சரிநிகராக! எய்த்துப்பிழைக்காமல், வழுக்கி விழாமல்! சம்மட்டி அடியினால் சீமாட்டிகள் சாய்ந்தனர், ஆனால் பேதமற்ற, சுரண்டுதல் அற்ற, சுந்தரபுரியாக ரஷியாமாறினதும், அந்நாடு அழகிகள் சிங்காரச்சீமாட்டிகளாவதற்காக வழுக்கி விழவேண்டிய நிர்ப்பந்தத்திலிருந்து விடுவிக்கப்பட்டு, காதல் சுதந்திரம் எனும் கனி உண்டுகளிக்கும் பெருமாட்டிகளின் இருப்பிடமாகி விட்டது. மாளிகையிலே மந்தகாசவாழ்வும் மண் குடிசையிலே மனோ வேதனையும் இருந்தால் தானே, மாளிகைமீது, மோகம் பிறக்கும்மண் குடிசையிலே வாழும்மாதருக்கு.லெனின் அமைத்த ரஷியாவிலே அந்தப்பேதம் இல்லை, எனவே, போகபோக்கியங்களைச் சிலர் அனுபவிப்பது கண்டு, தாமும் அதை அடையவேண்டும் என்ற ஆசைகொண்டு, அதனைப்பெற எந்தப்பாதை கிடைத்தாலும் சரியே என்று துணியும் நிலை இல்லை அங்கே இன்று மாதரசிகள் உள்ளனர். மையல் வலை வீசி மாளிகை வாசம் பெறுபவரல்ல; காதல் பூங்காவில் கவலையின்றி உலவும் காரிகையர் காட்சியளிக்கின்றனர். ——

நன்றி:—"புறுமார்க்" திருச்சி.







2-ம் பக்கத் தொடர்ச்சி

"வந்தேனுங்க" என்கிறான் வேணு, புளுகு பேசியாவது அந்தநேரத்திலேஎஜமானரின் கோபத்திலிருந்து தப்பித்துக் கொள்ள. ஆனால் வேலாயுதமோ, முன் இருந்ததைவிட அதிகசீற்றம் கொள்கிறார்.

"டே! வேணு! புளுகு பேசியா ஏமாற்றலாம் என்று பார்க்கிறே. என்னிடமா புளுகுபேசுவது? எந்தத்தவறு செய்தாலும் மன்னித்துவிடுவேன்; புளுகு பேசினால்மட்டும், விடமாட்டேன். அவனுடையமுகாலோபனம்செய்யமாட்டேன். தெரிகிறதா? பாவிப்பயலே! புளுகுபேசினால் வாய்புழுத்துப்போகும்" என்று ஏசுகிறார், சத்தியத்தின் மேன்மைபற்றி உபதேசிக்கிறார். வேணுவுக்குத் தெரியும், பொன்விளையும் பூமியைப்பூதப்பண்ணை என்று புளுகுபேசிஇவர் குறைச்சல்விலைக்குவாங்கினதும், பட்டகடனைத்தீர்க்கப் பண்ணையை விற்கவேண்டிய நிர்ப்பந்தத்திலே சிக்கிக்கொண்ட ஜெமீன்தார் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள, பண்ணையை விற்கவேண்டிய அவசியம் ஏற்பட்டதற்குக் காரணம் பாரிஸ்பிரயாணம் என்று புளுகினதும்.இடையே பல தரகர்கள் விதவிதமான புளுகு பேசி, பேசிய புளுகுக்கு ஏற்ற விகிதம் பணம்பெற்றதும், தெரியும்! ஆனால், இவை 'புளுகு' என்று உலகம்கூறமறுக்கிறதே! சமர்த்து என்றல்லவா புகழ்கிறது! வேலைக்காரன்என்னசொல்வான்? இனிமேல் புளுகுவதில்லைஎன்று வேலாயுதத்துக்குச் சத்தியம் செய்து தருகிறான்.

"இனி ஜாக்ரதையாகஇரு" என்று புத்திகூறிவிட்டு,புளுகுபேசினால்அதனாலே நமக்குத்தான் கஷ்டமும் நஷ்டமும் என்பது எப்போதும் உன்கவனத்திலிருக்க வேண்டும், அதற்காக வேண்டி ஒன்று செய்கிறேன். புளுகியகுற்றத்துக்காகஉன் சம்பளத்திலே ஒருரூபாய் குறைத்துவிட்டேன். இனி நீசத்தியத்துக்கு விரோதமில்லாமல் நடந்துவருவதாக எனக்குத் தெரிந்தால்பழையசம்பளம்'என்றுவேலாயுதம்உத்தரவிட்டார். வேணுவுக்கு மாதச் சம்பளம் 15! அதிலே ஒருரூபாய்போயிற்று, அவன்புளுகியதால்! எஜமானர்புளுகினால் எத்தனையோ ஆயிரம் இலாபம் கிடைக்கிறது, நாமோ, ஒருபுளுகுபேசினோம், எஜமானரின் கோபத்திலிருந்து தப்பிக்க, அதற்குச் சம்பளத்திலே ஒருரூபாய் நஷ்டமாயிற்றே! என்று வேணு விசாரப்படுகிறான். பைத்யக்கார வேணுவுக்குச் சூட்சமம் தெரியாது; புளுகு, பேசிப் பிழைப்பது, ஏழைக்கு ஆபத்து; ஆனால் வேலாயுதங்கள் வாழும்முதலாளி உலகிலே, அது அவர்களின் உரிமை! ஏகபோக மிராசுபாத்யதை இருக்கிறது,அவர்களுக்கு, அந்தத்துறையிலே!!

நவம்பர் புரட்சிக்குமுன்பு ரஷியகாட்டிலே வேலாயுதங்களே ஆட்சியாளர்கள்; லெனின் வேணுவைக் கூப்பிட்டான், முதலாளித்வமுறையின் சூட்சமசக்தி எது என்பதைக்காட்டினான், அந்தச்சக்தியை முறியடிக்கும் சம்மட்டியைத் தந்தான். பிறகுதான், நயவஞ்சகத்தால் நாட்டுச் செல்வத்தை உறிஞ்சிக்கிடந்த வேலாயுதங்களுக்கு, வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்த வேணுக்களின் சக்தி என்ன என்று தெரியவந்தது! இன்று அங்கே, புளுகிப் பிழைக்கும் சீமானும் இல்லை, புளுகியாவது பழுதெனிவது போன்றவாழ்வு நடத்தமுடிகிறதாஎன்ற வேலையிலே உழலும் வேணுவும் இல்லை! சக்திக்கேற்ற அளவு பாடு படுகிறார்கள், தேவைக்கேற்ற அளவு பெறுகிறார்கள். இந்த அமைப்பு முறையின் பயனாகவே ரஷியாவிலே, எய்த்துப் பிழைப்பவனும் ஏமாளியும் இல்லை! "என்ன செய்வது! அங்கத்தை வளர்க்க ஆயிரம் பொய்பேசியாவது தீரவேண்டியிருக்கிறது!" என்று பேசும் வறுமையாளனும் இல்லை, "ஒரு போடு போட்டேன், அவன் அதை உண்மையென்றே நம்பி விட்டான், அடித்தது எனக்கு ஆறு ஆயிரம்" என்று பொய்பேசிப் பெற்ற இலாபத்தைப் பூரிப்புடன் பேசிக்கொள்ளும் மாளிகைவாசியும் இல்லை. மக்கள்வாழ்கிறார்கள், ஒருவர் உழைப்பை மற்றொருவர் எய்த்து வாழும் நிலையிலே அல்ல! மானமும்மதியும், நீதியும் நேர்மையும் செழிக்கும் விதமான நிலையிலே உள்ளனர். பாடுபடுகிறார்கள், பலனை வேறொருவன் பறித்துக்கொள்வானே என்ற பயமின்றி! வேதனை இல்லை, வேலாயுதங்கள் இல்லாததால்!

## விடுதலை!

★

இருட்டறையில் உள்ளதடா உலகம்! சாதி
இருக்கின்றதென்பானும் இருக்கின்றானே!
மருட்டுகின்ற மதத்தலைவர் வாழ்கின்றாரே!
வாயடியும் கையடியும் மறைவதெந்நாள்?
சுருட்டுகின்றார் தம்கையில் கிடைத்தவற்றைச்
சொத்தெல்லாம் தமக்கென்று சொல்வார்தம்மை
வெருட்டுவது பகுத்தறிவே! இல்லையாயின்
விடுதலையும் கெடுதலையும் ஒன்றேயாகும்

(பாரதிதாசன்)

# ★ ஸ்டாலின் முழக்கம் ★

"முடங்கிக்கிடந்த ருஷியாவை ஐரோப்பிய வல்லரசாக ஆக்கியது ஐந்தாண்டுத் திட்டம். அதை நிறைவேற்ற உணர்ச்சி மட்டுமல்லக், கடுமையானஉழைப்புத் தேவை; அது நீ விளையாட்டாக இருந்தது. 'ஒன்று தீயிலேமடிவோம், அல்லது புடம்போட்ட தங்கமாக வெளிவருவோம்' என்ற ஒரே எண்ணத்துடன் ருஷியத்தொழிலாளி போராடினான். வெற்றியைப்பற்றி அவனுக்கு உறுதி இருந்தது. ஆனால் அதைஅடைவதற்குக்— குறுகிய காலத்தில் மிக்க பலத்துடன் அடைவதற்கு அவனுடைய வியர்வைத் துளிகள் ஒவ்வொன்றும் தொழிற்சாலைகளில் சிந்தப்பட்டது. ஓய்வே கிடையாது, மூச்சுவிட நேரமில்லை, நாளின் பெரும்பகுதியைத்தொழிற்சாலைகளில்செலவிட்டான். அவ்வளவு கடுமையான உழைப்பு; நிச்சயம் அவனை வணக்காது - ஆனால் ஒடித்து விட்டால்......ஆகவே சிறிதாவது ஓய்வுகொடுக்கலாம் -ஓய்வு? முடியவேமுடியாது என முழங்கினார் ஸ்டாலின் (1931 பெப்ருவரி 4-ல்)

"வேகத்தைச்சிறிது குறைத்து, எழுச்சியைத் தளர்த்தலாம் என்ற எண்ணமுண்டாயிருக்கிறது. இல்லை, தோழர்களே! அதுமுடியாத காரியம். வேகத்தைக் குறைத்துக்கொள்வது என்பது வீண்பேச்சு. அழிவு எண்ணம். மாறாகஅதை விட அதிகவேகம் அவசியமாக இருக்கிறது. எழுச்சியைத்தளர்த்துவது பின் தங்குவதாகும். அத்தகைய பிற்போக்குச் செய்கைதோல்விக்கே அடிகோலும். நாம் தோல்வியின் எதிரிகள். ஆகவே இது நாம்செய்யக்கூடியதல்ல. பிற்போக்கான செய்கைகளால்தான் ருஷியாவின் வரலாறு தோல்விமயமாக இருக்கிறது.

மங்கோலிய அரசர்கள் உங்களை முறியடித்தனர்.

துருக்கிச் சீமான்கள் உங்களைச்சிதைத்தனர்.

ஸ்வீடன் நாட்டுப் பிரபுக்கள் உங்களை வென்றார்கள்.

போலிஷ்—லிதுவேனியச்செல்வந்தர்கள் உங்களைச் சிதைத்தனர்.

ஆங்கில—பிரஞ்சு முதலாளிகள்உங்களை அல்லற்படுத்தினர்.

ஜப்பானிய தனவந்தர்கள் உங்களை உதைத்தனர்.

இந்தத் தோல்விகளுக்கெல்லாம் காரணமாக இருந்தவை பிற்போக்குச் சக்திகள்—சேனையின் பிற்போக்கு, கலையின் பிற்போக்கு, அரசாங்கத்தின்பிற்போக்கு, தொழில்முறையின்பிற்போக்கு, உழவின் பிற்போக்கு, ருஷியர் செம்மையாக உதைக்கப்பட்டனர், ஏன்? உதைப்பது எளிது. உதைத்தால் பலன் கிடைக்கும்.



ருஷிய நாட்டுக்கவி நிக்கோலாய்நெக்ராசவ் கூறுவதுபோல ருஷியாவில்வளமையின்பக்கத்தில் ஏழ்மையும், பலத்தின் அருகே பயமும் இருக்கின்றன. இந்தஇரகசியம் நம்மை உதைப்பவர்களுக்கு நன்றாகத்தெரியும். "உங்களிடம் வளம்இருக்கிறது. எனவே உங்களைக்கொண்டு நாங்கள்வாழ்வு அடையலாம்" என்று கூறிக்கொண்டே உதைத்தார்கள். "நீங்கள் ஏழைகள், உதவியற்றவர்கள். எனவே, நாங்கள் எங்கள் விருப்பப்படி உங்களை உதைத்துக்கொள்ளையடிக்கலாம்" எனச் சொல்லிக் கொள்ளையடித்தனர். அது தான் முதலாளித்தனத்தின் நீதி—பிற்போக்குநாடுகளையும், பலமற்றவர்களையும் கொள்ளையடிப்பது. "நீங்கள்பலமற்றவர்கள். முன்னேற்றமில்லாவர்கள். எனவே தோற்கடித்து அடிமைகொள்ளுகிறோம். உங்களிடம் பலம் இருக்கிறது. அதனால் நீதி உங்களிடம் இருக்கிறது. நாங்கள் உங்களைப்பற்றிக் கவனமாக இருப்போம்" என்பதுதான் முதலாளித்தனத்தின்முடிவானநீதி. நீங்கள் உங்களுடைய சோஷியலிஸ்ட் தாயகத்தை இழந்துவாழவிரும்புகிறீர்களா? உங்களுக்குவிருப்பமில்லாவிட்டால், உதைப்பதிலெவிருவிருப்பைக்காட்டுங்கள்; நாட்டின் பொருளாதார நிலையைப்பின்பற்றப் போல்ஷ்விக்கர்கள் காட்டியவழி செல்லுங்கள் வேகத்துடன். வேறுவழியில்லை.மற்றையநாடுகளுக்குஒரு நூற்றாண்டுக்குப்பின் இருக்கிறோம். இந்த ஒருநூற்றாண்டுப் பின்னுவைப் பத்து ஆண்டுகளில் கடக்கவேண்டும். இந்த முயற்சியில் வெற்றியடையவேண்டும். இல்லையென்றால் சிதைந்து அழிந்து ஒழியவேண்டும்.

---

## திருச்சி தமிழர் மன்றம்

மன்றத்தின் முதலாவது ஆண்டுவிழா 28—10—45ல் ஞாயிற்றுக்கிழமை தோழர் டி. டி. ராஜன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அதுசமயம் "நடராசர் நூல்நிலையம்" என் ஒருஇலவசவாசகசாலை தோழர் எஸ். எம். பெருமாள்சாமி அவர்களால்திறந்துவைக்கப்பட்டது.

---

## தஞ்சை ஜில்லா

இசைவேளாளர் 4-வது மகாநாடு

சிக்கல் காரனேஷன் கொட்டகையில் நாளது 24—11—45 சனிக்கிழமை காலை 10—45க்கு நடைபெறும். தலைவர் மதுரைத்தோழர் பி. கே. சண்முகநாதன், பி. ஏ. பி. எல். அவர்கள், திறப்பாளர் பசுமலைதோழர் எஸ்.சோமசுந்தரபாரதியார், எம். ஏ. பி. எல். அவர்கள். கொடியேற்றுபவர் தஞ்சைதோழர் கே. நடராஜன், பி. ஏ. பி. எல். அவர்கள். வரவேற்புக்கழகத்தலைவர் தோழர் கே. எஸ். பிச்சப்பா.

Edited Printed and Published by C. N. Annadurai M.A., at "Dravida Nadu" Press,
317—319 Hodgsonpet, Conjeeveram.

